விரைவில் வருகிறது



T.R.மஹாலிங்கம்
குமாரி ருக்மணி
T.R.ராமச்சந்திரன்
K.மஹாதேவன்
பேபி கமலா.....
கிருஷ்ணன்....
மதுரம்........

ப்ரகதி

ஸ்ரீ வள்ளி




G.H.RAO

டைரக்ஷன்:- AV.மெய்யப்பன் & A.T.கிருஷ்ணஸ்வாமி B.A.



# வாழ்க்கைத் தோழன்

இந்திய வீடுகளில் பித்தளையைப்போல் சர்வ சாதாரணமாக உபயோகிக்கப்படும் உலோகம் வேறு எதுவும் கிடையாது. வெகுகாலத்திற்கு முன்பே கண்டு பிடிக்கப்பட்ட தாமிரம் துத்த நாகம் கலந்த இந்த உலோகமிஸ்ரம் நீடித்த உழைப்பு உடையது. இதைத் தகடாக அடிக்க முடிகிறது. எனவே, வீட்டிலோ அல்லது தொழில் ஆலையிலோ இதன் பிரயோஜனம் அளவிட முடியாது.

தாமிரத்தோடு சேர்க்கப்படும் துத்தநாகத்தின் அளவைக் கூட்டிக் குறைத்து, அதற்கு ஒப்ப ஈயம், மாங்கனீஸ், காரீயம், இரும்பு முதலிய உலோகங்களைக் கலந்தால் பித்தளையின் உறுதி, நிறம், கம்பியாக நீளுந் தன்மை இவைகளை உபயோகத்திற்கு வேண்டிய முறையில் அமைத்துக் கொள்ளலாம்.

ஏதாவது குறிப்பிட்ட உபயோகத்திற்கோ, பாளம், தகடு கம்பி, குச்சி இவைகளில் எந்த ரூபத்திலோ உங்களுக்குப் பித்தளை தேவையாய் இருந்தால் எங்களைக் கலந்து கொள்ளுங்கள். முழு விவரங்களுக்கு இந்தியா மெட்டல் சேல்ஸ் லிமிடெட், நவசாரி சேம்பர்ஸ், போர்ட், பாம்பேக்கு எழுதுங்கள்.

பி. எஸ். எஸ். (B. S. S.), ஐ. ஆர். எஸ். (I. R. S.), இன்னும் ராணுவத் திட்டப்படி உள்ள இரும்பு நீங்கலான மற்ற எல்லா உலோகங்களையும் நாங்கள் சப்ளை செய்கிறோம்.

K

## கமானி மெட்டல் இண்டஸ்ட்ரீஸ்

# சேதமின்றி வந்து சேர்ந்தன

## ஜே. கே.
## கோணிப் பைகளில்

முழு நலனுக்காக வேண்டி சரக்குகளை வெளியேற்றுவதற்கு ஜே. கே. கோணிப்பைகளையும், ஹெஸ்ஸெய்ன்ஸ்களையும் உபயோகியுங்கள்.

பிரத்தியேகமான தையல் கெட்டியான முனைகளின் மடிப்புகள் மிகவும் கடினமான எடைகளை தாங்கவும், அதிக உருப்படிகளை நிரப்பவும் ஏதுவாயிருப்பதுடன், பொத்தல் இல்லாமல் செய்து தனி பலத்தைக் கொடுக்கிறது.

எந்த குறிப்பான சரக்குக்குத்தகுந்த பிரத்தியேகமான அளவுகளும், நிறுக்களும் ஆர்டரின் பேரில் செய்யப்படும்.



## ஜே.கே. ஜூட் மில்ஸ் கோ., லிட்.
கான்பூர்

**இது ஒரு ஜே. கே. தொழில்**

JK 72




மலர் 4 } இதழ் 28 }

1945 பிப்ரவரி 18

{ தாரண ஆ { மாசி 7



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.



பெரிய மனிதர்களும் பெண்மணிகளும் சாதாரணமாய் அலங்கரித்து வரும் "கல்கி" அட்டையை இவ்வாரத்தில் இரண்டு அழகிய படகுகள் அலங்கரிக்கின்றன; ஆம், உண்மையிலேயே அலங்கரிக்கின்றன. நதிக் கரையும் நீலவானமும் மேகக் கூட்டமும் பாய் விரித்த படகும் சேர்ந்து விட்டால் உலகையே அலங்கரித்து விடுமே! "கல்கி" அட்டையை அலங்கரிப்பதற்குக் கேட்கவா வேண்டும்?

போட்டோ : ஜூனைன்.





# ஈறுகளில் ரத்தம் கசிந்தால்

## —உடனே கவனிக்க வேண்டும்!

பல் சொத்தைக்கு இந்த எச்சரிக்கையை அசட்டை செய்யாதீர்கள்! ரத்தம் கசிவது பயோரியா ஜின்ஜிவிடிஸ் இவைகளின் முதல் சின்னம் — இக்கொடிய ஈறு வியாதிகள் உங்கள் பற்களை நாசமாக்கி தேகம் முழுவதையுமே கெடுத்து விடக் கூடும். கிப்ஸ் "எஸ். ஆர்." டூத் பேஸ்ட் உபயோகியுங்கள். அதிலுள்ள சோடியம் ரெஸினோலியேட்டைத்தான் பல் வைத்தியர்கள் ஈறு வியாதிகளுக்கு உபயோகிக்கிறார்கள். கிப்ஸ் "எஸ். ஆர்." வழக்கமாக உபயோகித்தால் அது உங்கள் ஈறுகளை ஆரோக்கியமாகவும் பற்களை உறுதியாகவும் இருக்கச் செய்து தேகாரோக்கியத்தையும் பாதுகாக்கும்.

*Gibbs*

# "S.R." TOOTHPASTE



GSR. 19.33 TM

D. & W. GIBBS LTD., LONDON, ENGLAND



# கல்கி


மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 28


# என்ன சேதி?

### காலக்ஷேபப் பரிசு

கல்கியில் வெளியாகும் காலக்ஷேபத் துணுக்குகளுக்கு நேயர்களிடமிருந்து வரும் வோட்டுகளைக் கணக்கிட்டுப் பரிசு வழங்கி வந்த முறையைப் பல காரணங்களை முன்னிட்டு இந்த வாரத்துடன் ரத்து செய்திருக்கிறோம். இனி, ஆசிரியர் அபிப்பிராயத்தில் சிறந்ததாகத் தோன்றும் துணுக்குக்குப் பத்து ரூபாய் பரிசு அளிப்பதென்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. இது விஷயத்தில் ஆசிரியர் தீர்ப்பே முடிவானதாயிருக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறோம்.

### பாப்பா மலர்

மேற்படி பெயருடன் குழந்தைகளுக்காக ஒரு புத்தகம் வெளியிடப்படுமென்று ஏறக்குறைய எட்டு மாதங்களுக்கு முன்பு விளம்பரம் செய்து வேலையும் தொடங்கியிருந்தோம். காகிதக் கட்டுப்பாட்டு விதிகள், அவற்றைப் புரிந்து கொள்வதில் ஏற்பட்ட கஷ்டங்கள், இவை காரணமாக மேற்படி வெளியீடு வெகுவாகத் தாமதித்து விட்டது. கடைசியாக, சானது பிப்ரவரி 15ஆ சுபயோக சுப தினத்தில் பாப்பா மலர்ப் புத்தகம் வெளியாகியிருக்கிறது. கல்கி காரியாலயத்தார் இதுவரை தமிழ் நாட்டுக்குச் செய்திருக்கும் தொண்டுகளுக்குள்ளே இந்தப் பாப்பா மலர்ப் புத்தகமே தலைசிறந்த தொண்டு என்று கருதுகிறோம்.

குழந்தைகள் இந்தப் புத்தகத்தைக் கண்டதும் காதல் கொண்டு விடுவார்கள். குழந்தைகள் மீது அன்புள்ள பெற்றோர்கள் யாராயிருந்தாலும் இந்தப் புத்தகத்தைக் கண்டதும் தங்கள் குழந்தைகளுக்கு இதை வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று ஆசை கொள்வார்கள். மேனாட்டில் வெளியாகும் அற்புதமான பாப்பா மலர்ப் புத்தகங்களை ரயில்வே புக் ஸ்டால்களில் பார்த்துப் பார்த்து பெருமூச்சு விட்ட தமிழன்பர்கள் அவற்றுக்கு எவ்விதத்திலும் குறைவுபடாத இந்தப் பாப்பா மலர்ப் புத்தகத்தைப் பார்த்துக் களிக்கூத்தாடுவார்கள்.

காகித விலை யானை விலை குதிரை விலையாயிருக்கும் இந்த நாளில், குழந்தைகளுக்கான புத்தகம் என்பதற்காகவே விலையை ரூபாய் இரண்டரையாக வைத்திருக்கிறோம். உங்களுக்கு வேண்டிய பிரதிகளுக்கு உடனே கல்கி ஏஜண்டுகளிடம் ஆர்டர் கொடுத்து விடுங்கள்.

### அடுத்த மாமாங்கம்

"கும்பகோணத்தில் நடக்கும் மாமாங்கத்துக்கு வாரீர்கள்! வைசூரி அம்மை, ரயிலில் இட நெருக்கடி" என்ற விளம்பரம் ஒரு பக்கம். "மாமாங்கத்துக்கு வாருங்கள்;—பொருட் காட்சியையும் பாருங்கள், புண்ணியத்தையும் பெறுங்கள்" என்ற விளம்பரம் மற்றொரு பக்கம். "மாமாங்கத்துக்குப் போகலாமா வேண்டாமா?" என்று இதனால் பல பேர் யோசிக்கும்படி ஆகிவிட்டது. புத்திசாலிகளான சிலர் "அடுத்த மாமாங்கத்துக்குப் போகலாம்; அப்போது யுத்தம் கித்தம் இட நெருக்கடி வைசூரி ஒன்றுமிருக்காது" என்று தீர்மானித்துக் கொண்டிருக்கிறார்கள். மாமாங்கத்துக்கு இப்போது செல்லாமலிருப்பது என்னவோ, புத்திசாலித்தனமான யோசனைதான். ஆனால் அடுத்த மாமாங்கத்தின்போது மூன்றாவது மகா யுத்தம் நடந்து கொண்டிருக்காது என்பது என்ன நிச்சயம்?

---

*சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: எம். பீ. ஸலீம், பங்களா ஹவுஸ், ராயல் தெரு, பரங்கிப்பேட்டை.*

# மூவர் மகாநாடு


கிரிமியாவில், யால்டா என்னும் ஆரோக்ய ஸ்தலத்தில் மூன்று தலைவர்கள் கூடி இரகசியத்
தகவல்களைத் தவிர, மற்ற பூராத் தகவல்களையும் பரிமாறிக் கொண்டார்கள்.
ரகசியம்
ரகசியம்
ரகசியம்


ஜெர்மனி நிபந்தனையின்றிச் சரணகதி
அடையும்படி செய்வதற்கு வேண்டிய
ட்டங்கள் வகுக்கப்பட்டன.


ஜெர்மனியைத் தங்கள் பூரண அதிகாரத்தின்கீழ் வைத்துக்கொண்டு,
அதனிடம் யுத்தநஷ்டஈடு வசூலிக்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது.

-உம்மன்


யுத்தத்துக்குப்பின் உலக சமாதானத்தைப் பாதுகாப்பதற்காக ஒரு அகில உலக ஸ்தாபனத்தை ஏற்படுத்துவதென்றும் முடிவு செய்தார்கள்.
மகாநாடு நடந்து கொண்டிருக்கிறது
எல்லாரும் வரலாம்.
தரையில் இடமிருந்தால் உட்காரவேண்டும்


லண்டனிலுள்ள போலந்து சர்க்காரைக் கைவிடவும் முடிவாயிற்று.


காலஞ்சென்றதாகச் சொல்லப்பட்ட அட்லாண்டிக் சாஸனத்தில் தங்களுடைய நம்பிக்கையை ஊர்ஜிதப்படுத்திவிட்டுக் கலைந்தார்கள்.

# கண்ணிருந்தும் காணாதவர்கள்

இதோ நம் காலத்தில் நம் கண் முன்னால் ஒரு அற்புதம் நடைபெற்று வருகிறது.

உலக சரித்திரத்தில் இதுவரை நடந்திராத மகத்தான அற்புதம் அது.

ஏழை - பணக்காரன், முதலாளி - தொழிலாளி, எஜமான் - அடிமை என்ற வித்தியாசங்கள் இல்லாத புது உலகம் சிருஷ்டிக்கப்பட்டு வருகிறது.

அப்படிச் சிருஷ்டிக்கப்பட்டு வரும் புது உலகமானது, அதை மூர்க்கத்துடன் தாக்கிய பழைய உலகத்தின் மீது அதிசயமான வெற்றி கொண்டு வருகிறது.

கண் உள்ளவர்களெல்லாம் இதைப் பார்க்கலாம்; கண்ணைத் திறந்து நோக்குவோர் எல்லாரும் பார்க்கலாம். பார்த்து ஆனந்த மடையலாம்; களிக்கூத்தும் ஆடலாம்.

கண்ணிருந்தும் சிலர் இந்த அற்புதத்தைப் பார்க்க மறுக்கிறார்கள். கண்ணை இறுக மூடிக் கொண்டு, "ஒன்றுமில்லையே?" என்கிறார்கள். அவர்களுடைய துரதிர்ஷ்டம் அது! கண்ணிருந்தும் குருடர்கள் என்று இவர்களைத்தான் சொல்ல வேண்டும்.

* * *

நாஜி ஜெர்மனியின் மீது கம்யூனிஸ்ட் ருஷ்யா வெற்றி கொள்ளும் அற்புதத்தைத்தான் நாம் சொல்கிறோம். சர்ச்சிலும் ரூஸ்வெல்ட்டும் தோழர் ஸ்டாலினைத் தேடி ஓடும் அதிசயத்தைப் பற்றித்தான் கூறுகிறோம்.

இதை அற்புதம் என்றும் அதிசயம் என்றும் நாம் சொல்வது ஏன், இதைக் குறித்து இவ்வளவு அதிக சந்தோஷப்படுவது ஏன் என்பதை நமது நேயர்களுக்கு விளக்கிச் சொல்லக் கடமைப் பட்டிருக்கிறோம். இதன் பொருட்டு இருபத்தைந்து வருஷத்துக்கு முந்திய பழைய சரித்திரத்தைக் கொஞ்சம் ஞாபகப்படுத்திக் கொள்வது அவசியமா யிருக்கிறது.

சென்ற மகா யுத்தம் 1917-ம் வருஷத்தில் உச்ச நிலையை யடைந்திருந்த சமயத்தில், ருஷ்யா தேசத்திலே ஒரு யுகப் புரட்சி எழுந்தது. அந்த யுகப் புரட்சியைப் பற்றித்தான்,

"இமயமலை வீழ்ந்ததுபோல் வீழ்ந்துவிட்டான்
ஜார் அரசன்......"

என்றும்,

"இடிபட்ட சுவர்போலே கலி விழுந்தான்
கிருதயுகம் எழுக மாதோ!"

என்றும், நமது தீர்க்கதரிசியான பாரதியார் பாடினார்.

அந்த யுகப் புரட்சியிலே ருஷ்யாவின் பழைய ராஜ வம்சம், பழைய பிரபுக்களின் வம்சம், பழைய அரசாங்க முறை, பழைய சமூக வாழ்வு முறை, பழைய தரித்திரம், பழைய அடிமைத் தனம், பழைய மூடத்தனம் எல்லாம் அடியோடு அழிந்து நிர்மூலம் ஆயின.

ஆண்டான் — அடிமை என்ற பேதமில்லாத புதிய சமுதாய முறை ஏற்பட்டது. தேசத்தின் மூலப் பொருள்களும் விளை நிலங்களும் தொழிற்சாலைகளும் தேச மக்கள் எல்லாருக்கும் பொது உடைமை ஆயின. தேசத்தின் அரசாங்கம் ஜனங்களின் அரசாங்கம் ஆயிற்று.

இதெல்லாம் முதலாளித்வத்தை அடிப்படையாகக் கொண்ட ஐரோப்பாவின் மற்ற நாடுகளுக்குப் பொறுக்கவில்லை. 1920-ம் வருஷத்தில் ஐரோப்பாவைச் சேர்ந்த பதினாறு நாடுகள் சேர்ந்து ருஷ்யாவின் புதிய பொது உடைமை ஆட்சியைக் குழி வெட்டிப் புதைப்பதற்காகக் கிளம்பினார்கள். இந்தப் பதினாறு நாடுகளில் பிரிட்டனும் ஒன்று என்று சொல்லவேண்டியதில்லை.

"போல்ஷிவிக் பூதத்திலிருந்து உலகத்தைக் காப்பதற்காகப் பதினாறு நாடுகளின் போர் யாத்திரை தொடங்கிவிட்டது!" என்று அப்போது ஒரு பிரிட்டிஷ் பிரபலஸ்தர் முரசு கொட்டி முழங்கினார்! அவர் யார் தெரியுமா? இப்போது பிரிட்டிஷ் பிரதம மந்திரி பதவி வகிக்கும் இதே மகானுபாவர் வின்ஸ்டன் சர்ச்சில்தான்!

உலகத்துக்கு ஏதோ கொஞ்சம் நல்லகாலம் இருந்தபடியால் பொது உடைமை ருஷ்யாவின் மீது பதினாறு நாடுகளின் படையெடுப்பு அப்போது வெற்றி பெறவில்லை. இதற்கு முக்கிய காரணங்கள் மூன்றாகும்:—

1. அப்போதுதான் யுத்தம் முடிந்திருந்தபடியால் ஐரோப்பிய நாடுகள் பொதுவாகக் களைப்புற்று, "போதும்

போதும் யுத்தம்'' என்ற மனப்பான்மையுடன் இருந்தன.

2. அந்தப் படை எடுப்பை எதிர்த்து, ஐரோப்பிய நாடுகளின் தொழிலாளிகள்—பிரிட்டிஷ் தொழிலாளிகள் உள்பட—பெருங்கிளர்ச்சி செய்தார்கள். ருஷ்யாவுக்கு விரோதமாகப் போர் நடத்த யுத்த தளவாடங்களைக் கப்பலில் ஏற்றமாட்டோம் என்றார்கள். இந்தக் கிளர்ச்சி ஓரளவு பலன் தந்தது.

3. அப்போதுதான், புதிய ருஷ்யாவின் பிரம்மாவான தோழர் ஸ்டாலின், ''செஞ் சேனை'' என்ற பெயருடன், பொது உடைமையை நிலை நாட்டுவதற்காக வீராவேசத்துடன் போராடக் கூடிய புதிய ருஷ்யாவின் மகா சைன்யத்தைச் சிருஷ்டி செய்தார்.

இந்தக் காரணங்களினால் பதினாறு நாடுகளின் படையெடுப்பு தோல்வியுற்றது. ருஷ்யாவின் புது உலக சிருஷ்டி காப்பாற்றப் பட்டது.

வேடிக்கையைக் கேளுங்கள்! சர்ச்சில் அன்றைக்கு அழிக்க விரும்பிய போல்ஷிவிக் ருஷ்யாதான் இன்றைக்கு ஐரோப்பாவை — ஏன் உலகத்தையே — நாஜி பூதத்துக்கு அடிமையாகாமல் காப்பாற்றியிருக்கிறது!

பதினாறு நாடுகளின் படையெடுப்பைத் தடுப்பதற்காக அப்போது அமைக்கப்பட்ட செஞ்சேனைதான், இன்று பெர்லினுக்கு முப்பது மைல் தூரத்தில் ஓடெர் நதிக்கரையில் நின்று வெற்றி முழக்கம் செய்கிறது.

இந்த அற்புதம் எப்படி விளைந்தது என்பதைத் தெரிந்து கொள்வதற்கு மறுபடியும் பழைய கதைக்குப் போவோம்.

பதினாறு நாடுகளின் படையெடுப்புக் குலைந்த பிறகு, ருஷ்யப் பொது உடைமைத் தலைவர்கள் தங்கள் புது உலக சிருஷ்டியைத் தொடர்ந்து நடத்தினார்கள். அந்த முயற்சியில் அவர்களுக்கு ஏற்பட்ட இடையூறுகளும் தொல்லைகளும் எதிர்பாராக் கஷ்டங்களும் கொஞ்சநஞ்ச மல்ல. பல நூறு வருஷத்து அடிமை வாழ்வினால் ருஷ்யப் பொது மக்கள் அறியாமையில் ஆழ்ந்து கிடந்தார்கள். யுத்தத்தினாலும் புரட்சியினாலும் நாட்டின் பொருளாதாரம் சீர் குலைந்து கிடந்தது. சுற்றிலுமிருந்த முதலாளி தேசத்தினர் உதவி செய்ய அடியோடு மறுத்தார்கள். சொல்ல முடியாத பயங்கரப் பஞ்சங்கள் வந்து சேர்ந்தன.

இவ்வளவுக்கும் அந்த தீரர்கள் ஈடு கொடுத்தார்கள். ஐந்து வருஷத் திட்டம் என்றும், பத்து வருஷத் திட்டம் என்றும் போட்டார்கள். முன்னம் ருஷ்யாவில் இயந்திரத் தொழில் என்பது அடியோடு இல்லாம லிருந்தது. புதிது புதிதாக இயந்திரத் தொழில்களை நாடெங்கும் ஏற்படுத்தினார்கள். இயந்திரங்களைக் கொண்டு விவசாயத்தை ஒன்றுக்குப் பத்து மடங்காகச் செய்தார்கள். தேசத்து மக்கள் அனைவரையும் படிப்பித்தார்கள்.

இதற்கிடையில், என்றைக்காவது ஒரு நாள் முதலாளி தேசங்கள் படையெடுக்கும் என்று எதிர்பார்த்து அதற்கும் ஆயத்தம் செய்து கொண்டிருந்தார்கள். மிக்க முன் யோசனையுடன், மாஸ்கோவுக்கு 500 மைலுக்குக் கிழக்கே யூரல் மலைப் பிரதேசங்களில் பல ஜீவாதாரத் தொழிற் சாலைகளை அமைத்தார்கள். இன்னும் ஆயிரம் மைல் உள்ளே ருஷ்யா பிரதேசத்தில் தொழிற்சாலைகளை அமைத்தார்கள்.

ருஷ்யாவில் புது உலக சிருஷ்டி ஆரம்பமாகிச் சில காலத்திற்குப் பிறகு அந்நாட்டுக்குப் போய்த்திரும்பிய நமது கவீந்திரர் டாகூர், பண்டித ஜவாஹர்லால் நேரு முதலியவர்கள் ருஷ்யாவின் புது வாழ்வைப் பற்றி மிக வியந்து பேசி, நம்மை யெல்லாம் அதிசயத்தில் மூழ்கச்செய்தார்கள்.

இப்படி யிருக்கையில், சென்ற 1941-ஜூன் மாதத்தில் ருஷ்யாவின் மீது நாஜி ஜெர்மனி திடீரென்று படையெடுத்தது. ஒரு வருஷத்துக்கு முன்னால் செய்து கொண்ட சிநேக உடன்படிக்கையைக் காலால் மிதித்து விட்டு ஜெர்மனி யுத்தம் ஆரம்பித்தது.

யுத்தம் ஆரம்பித்த புதிதில் அமெரிக்காவிலும் கிரேட் பிரிட்டனிலும் பல யுத்த நிபுணர்களும் பத்திரிகைகளும் ருஷ்யாவின் படுதோல்விக்கு மூன்று மாசம்தான் கெடு வைத்தார்கள். ருஷ்யாவின் புது உலக சிருஷ்டி தலைகுப்புற விழுந்துவிடப் போகிற தென்றும், சோவியத் ஆட்சி முறை மண்ணைக் கவ்வப் போகிற தென்றும் பளர் குதூகலத்துடன் எழுதினார்கள்.

இப்படி அவர்கள் எண்ணியதில் ஆச்சரியமில்லைதான். போர் முறைகளிலும், இயந்திர சாதனங்களிலும் எவ்வளவோ முன்னேற்ற மடைந்திருந்த பிரான்ஸ் பட்ட பாட்டில் ருஷ்யா எந்த மூலை என்று உலகம் எண்ணியது. ஹிட்லரே அப்படி எண்ணி அடியோடு ஏமாந்து போனார். ருஷ்யாவுக்கு அவ்வளவு சமீபத்திலிருந்த ஹிட்லரே அவ்விதம் எண்ணி ஏமாந்திருக்கும்போது தூரத்திலுள்ளவர்கள் ஏமாறுவதற்குக் கேட்பானேன்?

*ஆனால் தீர்க்க தரிசனத்துடன் வரப்போவதை உணர்ந்து கூறிய சில அறிவாளிகளும் இல்லாமற் போகவில்லை. ருஷ்யாவில் ஆயுத பலமும் யுத்த ஆயத்தமும் குறைவாயிருந்தாலும் அங்கே "ஜன சக்தி" என்னும் ஒரு புதிய மகா சக்தி உதயமாகியிருக்கிறது என்பதை அவர்கள் உணர்ந்திருந்தார்கள். இங்கிலாந்தில் காண்டர்பரி என்னும் பெரிய கோவில் பாதிரியாரான டாக்டர் ஹியூலட் ஜான்ஸன் என்பவர் ருஷ்யாவைப் பற்றி அப்போதுதான் * "உலகில் ஆறில் ஒன்று" என்னும் புஸ்தகத்தை எழுதியிருந்தார்.*

*ஜெர்மனி ருஷ்யாவின் மீது படையெடுத்த ஐந்தாவது நாள் மேற்படி காண்டர்பரி பாதிரியார் 'நியூஸ் கிரானிகள்' பத்திரிகைக்கு ஒரு செய்தி அனுப்பினார். பிரசுரிக்க மறுக்கப்பட்ட அச் செய்தியில் அவர் கூறியதாவது:—*

"1941 ஜூன் 22உ ஞாயிற்றுக்கிழமை மூன்று மணி ஐந்து நிமிஷத்திற்கு ஹிட்லர் தன்னுடைய சாவு ஓலையில் தானே கையெழுத்திட்டார். நாஜிக் கொள்கைக்கும் சாவு மணி அடித்தார். அந்த நிமிஷத்தில் ஸோவியத் யூனியனை அவர் நம்பிக்கைத் துரோகமாகத் தாக்கினார். அப்படிச் செய்ததினால் தம்முடைய முடிவான தோல்வியை ஊர்ஜிதப்படுத்திக் கொண்டார். செஞ்சேனையின் மகா வீரத்தையும் 19 கோடி ஸோவியத் பொது மக்களின் ஜனசக்தியையும் ஹிட்லர் தாக்கியதினால் அவருடைய பயங்கர ராக்ஷச யுத்த யந்திரமானது பாறையில் மோதிய கண்ணாடியைப் போல் தூள் தூளாகப் போகிறது.

ஹிட்லர் ருஷ்யாவை மூன்று மாதத்திற்குள் தோற்கடித்து அடியோடு நசுக்கினால் தான் நசுக்கினது. ஆனால் அது ஒரு நாளும் முடியாத காரியம்.

துரோகத்தனமாகத் திடீரென்று தாக்கியபடியால் எல்லைப் புறத்துக்கு 600 மைல் தூரத்திலுள்ள மாஸ்கோவை ஹிட்லர் ஒரு வேளை பிடித்து விட்டாலும், மாஸ்கோவுக்குப் பின்னால் 600 மைல் தூரத்தில் யூரல் மலைப் பிரதேசத்தில் நின்று ருஷ்யர்கள் சண்டையிடுவார்கள். ஹிட்லர் அங்கும் வந்து விட்டால் இன்னும் ஆயிரம் மைல் பின்னால் உள்ள குஸ்பாஸ் மலைப் பிரதேசத்தில் நின்று சண்டையிடுவார்கள்.

ஹிட்லருடைய நாஜிப் படை போகும் ருஷ்யப் பிரதேசங்களிலெல்லாம் ருஷ்ய மக்கள் பின்னால் நின்று தாக்குவார்கள். மற்ற நாடுகளில் போல ருஷ்ய மக்களை ஒரு தடவை ஜயித்து விட்டதனால் அவர்களை அடக்கி ஆள முடியாது. ஏனெனில் ருஷ்ய மக்கள் அவர்களுடைய நிலத்துக்குச் சொந்தக்காரர்கள். அவர்களுடைய வயல்களுக்கும் வீடுகளுக்கும் தொழிற்சாலைகளுக்கும் சொந்தக்காரர்கள். அவர்களுடைய உடைமைகளுக்காக உயிரைக் கொடுத்து அவர்கள் போரிடுவார்கள். அவர்களை ஒரு நாளும் ஜயிக்க முடியாது.

முடிவாக நாஜி சைன்யந்தான் ருஷ்யாவிலிருந்து முறியடிக்கப்பட்டுச் சின்னாபின்னமாகி ஜெர்மனிக்குத் திரும்பி ஓடி வரும் என்று நான் நிச்சயமாய் நம்புகிறேன்.* அப்படியானால் உலக சரித்திரத்திலேயே ஒரு புதிய நல்ல அத்தியாயம் ஆரம்பமாகு மென்று நம்புகிறேன். வகுப்புகளுக்குள் சமத்துவத்தையும் ஜாதிகளுக்குள் சமத்துவத்தையும் நீதியையும் நிலை நாட்ட ருஷ்யா நிமிர்ந்து நிற்கிறது. மனிதனை மனிதன் கொடுமைப்படுத்துவதையும், மனிதனை மனிதன் கொள்ளை அடிப்பதையும் ஒழிப்பதற்கு ருஷ்யா கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறது. ஆகையினால்தான் ஹிட்லர் ருஷ்யாவைத் தாக்கியிருக்கிறார்."

*மேற்படி காண்டர்பரி பாதிரியாரின் வாக்கு அப்படியே பலித்திருப்பதை இப்போது காண்கிறோம். நம் கண் முன்னால் காண்கிறோம். முரசு கொட்டிக் கொண்டு ருஷ்யாவுக்குள் பிரவேசித்து ஆயிரம் மைலுக்கு மேல் உள் நாட்டில் சென்ற நாஜி சைன்யம் முறியடிக்கப்பட்டு அலங்கோலமாய்த் திரும்பி ஓடி ஜெர்மனிக்குள் புகுந்திருப்பதைப் பார்க்கிறோம். ருஷ்ய செஞ்சேனை பெர்லின் நகரின் வாசலில் வந்து கம்பீரமாய் நிற்பதைக் காண்கிறோம்.*

*வரப் போகும் பிப்ரவரி 23உ யன்று செஞ்சேனை ஸ்தாபிதமான 27-வது வருஷ பூர்த்தியாகும். அந்த வருஷ பூர்த்தி கொண்டாட்டத்தைச் செஞ்சேனை பெர்லினில் கொண்டாடலாம் என்றும் எதிர்பார்க்கப் படுகிறது.*

* * *

*ஜெர்மனியின் ஆரம்ப வெற்றிகளைக் கண்டு மதிமயங்கிப் போன சிலர், பாவம், பின்னால் வந்த ஜெர்மனியின் தோல்விச் செய்திகளை நம்புவதற்கே மறுத்து வந்தார்கள். வட ஆப்பிரிக்காவில் ரோமல் பின் வாங்கிச் சென்றபோது அவர்கள் "புலி பதுங்குவது பாய்வதற்காக" என்றார்கள். ரோமல் ஆப்பிரிக்காவைக் காலி செய்துவிட்டு ஜெர்மனிக்குத்*

---

*"The socialist sixth of the world" by the Dean of Canterbury. *இந்தப் புத்தகம் 1944-ம் வருஷம் ஜனவரி மாசத்திற்குள்ளே 19 பதிப்பாகி உலகெங்கும் 80 லட்சம் பிரதிகள் விற்கப்பட்டன. இந்த ஆங்கில நூல் சென்னை ஜனசக்தி ஆபீஸில் கிடைக்கும். விலை ரூபாய் 3.*

திரும்பியபோது ''மத்தியதரைக்கடலில் ஏதோ வெடி வைத்துவிட்டுப் போயிருக்கிறான்'' என்றார்கள். ருஷ்யாவிலிருந்து நாஜி சைன்யம் திரும்ப ஆரம்பித்தபோது, ''ஏதோ ஒரு சூட்சுமமான காரணத்துக்காகத்தான்; பார்த்துக்கொண்டே இருங்கள்'' என்றார்கள். பிறகு, ''ருஷ்யர்கள் ஒருநாளும் ஜெர்மனிக்குள் நுழைய முடியாது'' என்றார்கள். அப்படிப் பட்டவர்கள் இன்னமும் ''பெர்லினுக்கு வந்ததும் ருஷ்யப் படைகள் மாயமாய் மறைந்துவிடப் போகின்றன'' என்றுதான் சொல்லிக் கொண்டிருப்பார்கள்!

''ருஷ்யப் படைகள் ஜெர்மனிக்குள் புகுந்து பெர்லின் வாசல் வரையில் வந்திருப்பது உண்மைதானா?'' என்று தெரிந்து கொள்ள நிச்சயமான சாட்சியம் வேண்டுமென்றால், இதோ சர்ச்சிலும் ரூஸ்வெல்ட்டும் ஸ்டாலினைத் தேடிக்கொண்டு ருஷ்யப் பிரதேசமான கிரிமியாவுக்குப் போனதொன்றே தக்க அத்தாட்சியாகும்.

மேற்படி மூன்று தலைவர்களும் சேர்ந்து வெளியிட்டிருக்கும் அறிக்கையைப் பார்த்தால் ஸ்டாலின் கை மேலோங்கியிருக்கிறதென்று திண்ணமாகத் தெரிய வரும். லண்டனிலுள்ள பழைய போலிஷ் அரசாங்கத்தைப் புறக்கணித்து லப்ளினிலிருந்து வார்ஸாவுக்கு மாறியிருக்கும் போலிஷ் கவர்ன்மெண்டைச் சர்ச்சிலும் ரூஸ்வெல்ட்டும் ஒப்புக் கொண்டிருப்பதைக் காட்டிலும் அதற்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்? அது கூடப் போதாதென்றால், செத்துப் போனதென்று கருதப்பட்ட அட்லாண்டிக் சாஸனத்தை மூவரும் சேர்ந்து உயிர்ப்பித்திருப்பது நிச்சயமாய்ப் போதுமானது.

* * *

''எல்லாம் சரிதான்; ருஷ்யாவின் வெற்றியினால் நமக்கென்ன பிரயோசனம்? நாம் எதற்குச் சந்தோஷப்பட வேண்டும்?'' என்று கேட்கலாம்.

துரதிருஷ்டவசமாக ருஷ்யாவின் வெற்றியினால் இந்தியா அடைந்திருக்கக் கூடிய முழுப் பிரயோஜனத்தையும் இப்போது நாம் அடைய முடியாமலிருப்பது உண்மையேதான். இதற்கு முக்கிய காரணம் இந்திய அதிகார வர்க்கத்தின் சூழ்ச்சியும் நம்மவர்கள் அதில் விழுந்து விட்டதுமே யாகும்.

நமது 1941-ம் வருஷத்து ஆகஸ்டு மாதத்து இதழில், ''அஹிம்ஸையா? அரசியலா?'' என்று நாம் எழுதிய போது இந்த மாதிரி யெல்லாம் நேரிடுமென்று ஒருவாறு எதிர் பார்த்தோம். அஹிம்ஸையின் பேரில் நமக்கு அப்போதும் சரி, இப்போதும் சரி எவ்விதக் கோபமோ மனஸ்தாபமோ இல்லை. அஹிம்ஸையின் பேரால் ஒரு அருமையான அரசியல் சந்தர்ப்பம் போய்விடுகிறதே என்றுதான் வருந்தப் பட்டோம்.

காண்டர்பரி பாதிரியாரைப் போலவே ஹிட்லருடைய மிருக சக்தியை ருஷ்யாவின் ஜன சக்தி நிச்சயமாக வெற்றி கொள்ளப் போகிறதென்று எதிர்பார்த்தோம். அந்தப் புது நிலைமைக் கேற்ப நமது அரசியல் போக்கை மாற்றிக் கொள்ள வேண்டுமென்று கூறினோம்.

அதிகார வர்க்கத்தின் சூழ்ச்சியினாலும் நம்மவர்களின் ஆத்திரத்தினாலும் அவ்விதம் நடக்காமல் போய் விட்டது. ஆகையினால் ருஷ்யாவின் இந்த மகத்தான வெற்றியினால் நம் இந்தியா அடைந்திருக்கக்கூடிய முழுப் பிரயோஜனம் கிடைக்காமற் போய் விட்டது. ஆனாலும் என்ன? ருஷ்யாவின் ஜனசக்தி வெற்றி யடைந்ததைக் குறித்து நாம் ஏன் சந்தோஷ மடையக் கூடாது! நாடகத்திலும் காவியத்திலும் நல்லவர்கள் ஜயித்தால் நாம் சந்தோஷ மடைவதில்லையா? சரித்திரம் படிக்கும் போது நியாயக் கட்சி வெற்றி யடைந்ததாகப் படித்து நாம் மகிழ்ச்சி அடைவதில்லையா?

இப்போது நம் கண் முன்னே நடக்கும் சரித்திரத்திலும் ருஷ்யாவின் ஜனசக்தி வெற்றி அடைந்து வருவதைப் பார்த்து நாம் ஏன் சந்தோஷப்படாமல் இருக்க வேண்டும்? ருஷ்யாவும் பிரிட்டனும் ஒரு கட்சியில் இருப்பதற்காக நமது மனசை நாம் ஏன் குறுக்கிக் கொள்ள வேண்டும்?

அப்படி பிரிட்டன் மீது தாங்க முடியாத கோபமுள்ளவர்கள் கூட உண்மையில் ருஷ்யாவின் வெற்றியைக் குறித்துச் சந்தோஷப்பட இடமிருக்கிறதே? உலகத்தில் இத்தனை காலமும் முதன்மை ஸ்தானத்தை வகித்து வந்த பிரிட்டன் இப்போது மூன்றாவது ஸ்தானத்தை அடைந்து விட்டது என்று எண்ணியாவது சந்தோஷப்படலா மல்லவா?

அவ்விதம் சந்தோஷப் படுவதற்குப் பதிலாக, ருஷியாவும் ஜெர்மனியும் ஒன்றுதான் என்றும், ஸ்டாலினும் சர்ச்சிலும் ஒரே ரகந்தான் என்றும் சொல்லி முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டிருப்பவர்கள் ''கண்ணிருந்தும் காணாத'' துரதிர்ஷ்டசாலிகள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# வான சஞ்சாரம்

இசைத் தேனீ

இக்காலத்திய இளம் பாடகர்களில் பால முரளி கிருஷ்ணனுக்கு அமைந்திருக்கும் சாரீரம் அபூர்வம். இனிமையும் கனிப்பும் கொண்டது. சாதகமோ அதிகம். ஜனவரி 30௳ சென்னை ரேடியோவில் அவர் செய்த கச்சேரி இன்பமாயிருந்தது. சாவேரி, ஆபோகி, சங்கராபரண ராகங்கள் கற்பனை நிறைந்து வெகு சரளமாய் வெளிவந்தன. அநேகமாய் எல்லா உருப்படிகளுக்கும் ஸ்வரம் பாடினார். லயவிந்யாச நடைபேதங்களான வேலைப்பாடுகள் விரு விருப்பாயிருந்தன. ஆனால் சற்று மிதமிஞ்சியவை போல் கண்டன. அத்துடன் ஆத்திரமும் அடித்துப் பாடுவதும் அடிக்கடி தென்பட்டன. அவ்விடங்களில் அவர் குரலுக்கும் வழிக்கும் இயற்கையான சுகபாவம் குறைந்து விடுகிறது. அதை அவர் எளிதில் திருத்தி சங்கீதத்தை மேம்படுத்திக் கொள்ளலாம்.

அன்று காலையிலும் மாலையிலும் அதே நிலையத்தில் பாடிய சரோஜினி ஸ்ரீநிவாஸனுக்கும் இனிமையான குரல். தோடி, கல்யாணி, பைரவி ராகங்களைத் திறமையாய் வழங்கினார். 'சாகேத நகர' உருப்படியில் நிரவல் ஸ்வரம் கவனிக்கத் தக்கவையாயிருந்தன. பிற்பகலில் பாடிய எம். கே. ஜயலக்ஷ்மி தன் ஞானபாவத்திற் கேற்பக் குரலின் உதவபடியையும் ராக ஆலாபனையையும் விருத்தி செய்து கொண்டால் அவர் பாட்டு மேம்படும்.

பிப்ரவரி 1௳க் கச்சேரிகளில் திருச்சியில் தஞ்சை எம். தியாகராஜனதே உயர்ந்த ரகமாய்த் தென்பட்டது. சாரீரத்தில் நல்ல உதவபடி. ஞானபாவமோ சிறந்தது. ராகங்களையும் உருப்படிகளையும் நிதானமாய்க் கையாண்டார். ஷண்முகப்ரியா அழகாயிருந்தது. கல்யாணியைப் பல்லவி ராகமாய் எடுத்துக் கொண்டு விஸ்தாரமாய் வழங்கினார்.

ஒரு ராக ஆலாபனையுடன் கச்சேரியை ஆரம்பிப்பது நமது வித்வான்களிடம் அபூர்வம். 2௳ திருச்சியில் எம். கனகசபைப் பிள்ளை குளிர்ந்த சாரீரமும் சுகவழியும் கொண்டு தைரியமாய் பைரவி ராகத்துடன் பாட்டைத் தொடங்கினார். ஹம்ஸாநந்தியும் அழகாயிருந்தது. ராகங்களிலும் உருப்படிகளிலும் சங்கதிகளின் தெளிவு விசேஷமாய்த் தென்பட்டது.

3௳ திருச்சியில் கேட்ட டி. எஸ். கிருஷ்ணனின் வயலின் வாத்யம் குறிப்பிடத்தக்கது. அவர் எடுத்துக் கொண்ட ராகங்களில் உதயரவிச்சந்திரிகா கலகலப்பாயிருந்தது. காம்போதியில் சஞ்சாரங்கள் அழகாயிருந்தன.

அன்றிரவு சென்னையில் ஆவலுடன் எதிர்பார்த்த வி. வெங்கடகிரியப்பா வராது ஏமாற்றி விட்டார். அவருக்குப் பதில் வேளூர் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை பாடினார். கச்சேரி மொத்தத்தில் நன்றாயிருந்தது.



ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி சந்தானம்

4௳ கச்சேரிகளில் திருச்சியில் கேட்ட எம். எஸ். மோஹனாம்பாளதே சிறந்ததெனலாம். இனிமையான குரல். முதல் பாகத்தில் கல்யாணியும் மோஹனமும், இரண்டாம் பாகத்தில் காம்போதியும் தோடியும் நேர்த்தியாயிருந்தன. உருப்படிகள் கச்சிதமாயிருந்தன.

அடிக்கடி விருந்து சாப்பிடுகிறவர்களுக்குச் சேர்ந்தாற்போல் சில காலம் அது கிடைக்காவிட்டால் தூக்கம் வராது. அதேபோல் மதுரை மணி இரண்டு மாதமாய்ச் சங்கீத மேடைகளுக்கு வர முடியாதிருந்தது ரஸிகர்களுக்கு ஏமாற்றத்தைக் கொடுத்தது. 5௳ திருச்சி ரேடியோவில் பாடிச் சென்னையிலும் அஞ்சல் செய்த அவர் கச்சேரியை எல்லோரும் மிகுந்த ஆவலுடன் கேட்டிருப்பார்கள். கச்சேரி ஜமாயிருந்ததென்பது சொல்லத் தேவையில்லை. கற்பனைப் பொழிவுடன் மிகு நிறைந்த சங்கீதம். ஸ்வரம் பாடும் பாணியில் தனிச் சிறப்பு. அன்று தோடி ஆலாபனையின் அழகு பிரத்யேகமாயிருந்தது. 'அப்பராம பக்தி', 'பாமாலைக் கிணையுண்டோ' உருப்படிகளில் கண்ட நிரவல் ஸ்வரங்கள் ஜிலுஜிலுப்பாயிருந்தன. கடைசியில் கௌடமல்லார் ராகத்தில் 'ஸாரஸமுகி' உருப்படியில் கண்ட ஸ்வரம் பலே ஜோர்.

சங்கீத மேடையில் பிரபல்யக் குறைவாயினும், யோக்யதையில் குறைவில்லாதவர் ஸீனியர் வித்வான் மாயவரம் வி. வி. கிருஷ்ணய்யர். 6௳ சென்னையில் அவர் செய்த கச்சேரி நன்றாய் வாய்த்தது. இக்காலத்திய அவசரமில்லாது எல்லாவற்றையும் நிதானமாயும் சௌக்கியமாகவுமே பாடினார். தர்பார், பந்துவராளியோடு தோடியை வெகு விஸ்தாரமாயும், கற்பனைப் பிடிகளுடனும் வழங்கினார். 'நின்னே நம்மினானு' உருப்படியில் சங்கதிகளின் நுட்பமும் அழுத்தமும் கவனத்தை யிழுத்தன.

7௳ காலையிலும் இரவிலும் திருச்சியில் பாடிய ஆர். சங்கரலிங்கத்தைக் கேட்டவர்கள் அவர் ஞானபாவத்தை ஒப்புக் கொள்வார்கள். நடுத்தர நய சாரீரம். மிகைப்பட்ட பிர்க்கா வகை. பெரும்பான்மையும் மத்யமகால நடை. பௌளி, ஹம்ஸத்வனி, சாவேரி ராகங்கள் குறைவில்லாமல் வெளிவந்தன. பிலஹரியில் மட்டுக் கடங்காத பிர்க்கா கண்டது. கடைசியில் பாடிய பாகேச்வரி எல்லாவற்றிலும் சிறப்பாயிருந்தது. உருப்படிகளையும் திறமையாய்க் கையாண்டார். அளவுக்கு மிஞ்சிய

பிர்க்காளிலும் அங்கங்கே ஏற்படும் சிறு தேசல்களையும், சில அதி சாமர்த்திய வேலைப் பாடுகளையும் குறைத்துக் கொண்டால் இவர் சங்கீதம் இன்னும் ரஸிக்கக் கூடியதாகும்.

8வ. சென்னையில் கேட்ட ஸரஸ்வதி பலராமனின் கானம் இனிமையாயிருந்தது. கமகப் பிடிகளுடன் பிருகவும் நிறைந்திருந்தது. முதல் பாகத்தில் அ ாணாவும், தோடியும் இரண்டாம் பாகத்தில் மோஹனமும், காம்போதியும் அழகு வடிவங்களாக இலங்கின.

அன்று நிகழ்ச்சியில் பாடிய வஜ்ரவேலு முதலியாரின் சங்கீதமும் உயர்ந்த ரகமாகவே தென்பட்டது. சற்று கனசாரீரம் போதும். ஞான பாவம் குறிப்பிடத்தக்கது. சாமா, கல்யாணி ராகங்கள் சிறப்புற்றிருந்தன. உருப்படிகள் ராகபாவமும் பிருகவும் நிறைந்திருந்தன.

9வ. சென்னையில் ராஜலக்ஷ்மிசந்தானம் வசீகரமான குரலில் அழகு கற்பனை சஞ்சாரங்களுடன், தன்யாசி ஹிந்தோள ராகங்களைச் சரளமாய்ப் பொழிந்தார். ராக ஸ்வரூபத்தை எளிதில் காட்டும் பிடிகளின் அழகு பிரத்யேகமாயிருந்தது. எதுகுல காம்போதி மனதைக் கவர்ந்தது. உருப்படிகளில் விழுந்த ஸங்கதிகள் தெளிவும் சுகபாவமும் கொண்டிருந்தன. 'ஸங்கீத ஞானமு' கிருதியில் கண்ட நிரவல் வெகு தேர்ந்தியாயிருந்தது. 'காணத் துக்கி' உருப்படி பாவம் நிறைந்து உருக்கமாயிருந்தது.

அத்தகைய உயர்ந்த ரக சங்கீதத்தில் அன்று நிருச்சியும் பின் வாங்கவில்லை. ஏனெனில் அங்கிருந்து மாலையிலும் இரவிலும் கேட்ட கே. கோமதியின் கானம் கர்ணமிருதமாயிருந்தது. இனிமை, கனிப்பு இவையுடன் அதிக ஜீவனும் கொண்ட குரல். தனக்கு எதுவும் பெரிதில்லைபோல் அலக்ஷ்யமாயும் தாராளமாயும் விட்டுப் பாடினார். ஹிந்தோளம், பந்துவராளி தோடி ராகங்கள் வெகு ஜோராயிருந்தன. தோடியில், மேல்மத்யமத்தில் நின்று சஞ்சாரம் செய்து நிஷாதம் வரையில்கூடப் பறந்தாற்போலிருந்தது. நாட்டை உருப்படியில் நிரவலும், 'நேநெந்து வெதகுதுரா'வில் நுட்பமான நாலைக்குப்பிடிகளும் குறிப்பிடத்தக்கவை.

10வ. சென்னையில் என். ராஜகோபாலன் பாடியது ஒழுங்கும் நிதானமும் கொண்டிருந்தது. முகாரி, ஸஹானா, தோடி ராகங்கள் கவனத்தை யிழுத்தன.

அன்று இரவில் அதே நிலையத்தில் டி. கே. ராதாகிருஷ்ணனின் வேணுகானத்துக்குப் பதிலாகச் செம்பை வைத்தியநாதய்யர் செய்த கச்சேரி அமோகமாயிருந்தது என்பது சொல்லத் தேவையில்லை. வெண்கல நாதம் போன்ற குரலில் தன்யாசி, கல்யாணி தோடி என்று ராகங்களைப் பொழிந்தார். கல்யாணியில் நிதானமும், தோடியில் விறுவிறுப்பும் பிர்க்காப் பொழிவும் கண்டன. ஆரபி கிருதியில் நிரவல் ஸ்வரங்களை ஜிலுஜிலுப்பாய் வாரி யள்ளினார்.

12வ. இரவு நிகழ்ச்சியில் பாடிச் சென்னையில் அஞ்சல் செய்த வஸந்தகோகிலத்தின் கானம் இன்பமாயிருந்தது. இவரது குரல் கச்சேரி மேடையில் எவ்வளவு சன்னமாயிருப்பினும் ரேடியோவில் தெளிவாயும் மதுரமாயும் கேட்கிறது. அன்று அவர் பாடிய ராகங்களில் கீரவாணியே சிறப்புற்றிருந்தது. அடாணாவும் அழகாயிருந்தது. 'பாமாலை' உருப்படியில் 'தமிழ்நாடுசெய்த' என்ற இடத்தில் நிரவல் ஸ்வரமும் கடைசியில் பாடிய ராகமாலிகையும் விமரிசையாயிருந்தன.

# ஸ்ரீ சரஸ்வதி கான சபா

## நூரணி :: பாலக்காடு

★

### மார்ச் 12-ம் தேதி திங்கட்கிழமை

| | | |
|---|---|---|
| மாஸ்டர் T. K. ராதாகிருஷ்ணன் | — | புல்லாங்குழல் |
| மைசூர் சௌடய்யா | — | பிடில் |
| பழனி சுப்பிரமணிய பிள்ளை | — | மிருதங்கம் |
| ஆலங்குடி ராமச்சந்திரன் | — | கடம் |

### மார்ச் 13-ம் தேதி செவ்வாய்க்கிழமை

ஸ்ரீமதி M. S. சுப்புலக்ஷ்மி & பார்ட்டி

### மார்ச் 14-ம் தேதி புதன்கிழமை

| | | |
|---|---|---|
| செம்பை வைத்யநாத பாகவதர் | — | பாட்டு |
| மைசூர் சௌடய்யா | — | பிடில் |
| பாலக்காடு மணி | — | மிருதங்கம் |
| ஆலங்குடி ராமச்சந்திரன் | — | கடம் |

ஒலிபெருக்கி ஏற்பாடு: திருச்சி ரேடியோ சேல்ஸ் & சர்வீஸ்



★

★ ராயக்கோட்டை மிட்டா ஜமீன்தாரும் தாலூக்கா போர்டு உறுப்பினருமாகிய திரு T. V. கோவிந்தராஜ் முதலியார் இளைய குமாரனும், மிட்டாதார் T. G. கிருபாநிதி முதலியார், அவர்கள் சகோதரனுமாகிய திருநிறைச் செல்வன் T. G. செல்வராஜ் முதலியாருக்கும் காஞ்சிபுரம் உபாத்தியாயர் முனிசாமி முதலியார் பௌத்திரியும், S. I. Ry டிரைவர் C. M. நடேச முதலியார் குமாரத்தியுமான திருநிறைச் செல்வி ஜகதீஸ்வரி அம்மாளுக்கும் 19-1-1945-ல் சென்னை பெத்துநாயக்கன் பேட்டை சீதாராம விலாஸ் இல்லத்தில் திருமணம் மிகச் சிறப்பாக நடந்தேறியது.

# போதும்! போதும்!

ஏதாவது மனதுக்குப் பிடிக்காத காரியங்களைப் பற்றித்தான் "போதும் போதும் என்று ஆகிவிட்டது" என்று சாதாரணமாய்ச் சொல்வது வழக்கம். ரொம்பவும் பிடித்த சந்தோஷமான காரியத்தைப் பற்றிக் கூட அப்படிச் சொல்லக்கூடிய சந்தர்ப்பம் நேரிடலாம் என்று சென்ற வாரத்தில் தெரிய வந்தது. பாரதியார் நிதியைப் பற்றித் தான் சொல்லுகிறேன். பிப்ரவரி 10உ நெருங்க நெருங்க மணியார்டர்களும் செக்குகளுமாக வந்து குவிந்து "கல்கி" காரியாலயத்தைத் திணற அடித்து விட்டன. ஜனவரி 31உ பாரதியார் நிதி ரூ. 25 ஆயிரமாக இருந்தது. இப்போது ரூ. 36 ஆயிரத்துக்கு மேல் போய்விட்டது.

எட்டயபுரம் பாரதி ஞாபகார்த்த நிதிக்கு நான் தயக்கத்துடனே கேட்டது ஐயாயிரம் ரூபாய்தான். அதற்கு ஏழு மடங்குக்குமேல் தமிழ்மக்கள் கொடுத்து எனக்கு நல்ல பாடம் கற்பித்துவிட்டார்கள்! தமிழ் மக்களின் தமிழன்பையும் கவிப் பண்பையும் பாரதியாரிடம் அவர்களுக்குள்ள பக்தியையும் அவ்வளவு குறைவாக நான் மதிப்பிட்டது பிசகு என்பதை எடுத்துக் காட்டி விட்டார்கள்.

இந்த முறையில் என்னுடைய மதிப்பு பிசகாய்ப் போனது குறித்து நான் பரம திருப்தி அடைகிறேன்.

* * *

பாரதியார் ஞாபகார்த்தமாக ஒரு நாற்பதினாயிரம் ரூபாய் நிதி 'அதிகப்படி' என்று நான் நினைக்கவில்லை. எட்டயபுரத்தில் அவ்வளவு பெரிய அளவில் ஞாபகச் சின்னம் அநாவசியம் என்றும் நான் கருதவில்லை.

சென்ற வாரத்தில் டாக்டர் ரவீந்திரநாத தாகூருக்கு ஞாபகச் சின்ன நிதி வசூலிப்பதைப் பற்றி வெளியாகி யிருக்கும் செய்தியைத் தினசரிகளில் படித்தோம். "பல பத்து லட்ச ரூபாய்" வசூலுக்குத் திட்டம் போட்டிருக்கிறார்கள்.

பாரதியார் ஞாபகார்த்தமாகவும் லட்சக் கணக்கில் நிதி வசூலித்து எவ்வளவோ சிறந்த ஏற்பாடுகள் செய்யலாம்; செய்ய வேண்டும். இம்மாதிரி நோக்கத்துடன் சில நண்பர்கள் போட்டிருக்கும் விரிவான திட்டம் பெரிதும் வரவேற்கத் தக்கதாகும்.

அத்தகைய பெரிய திட்டங்கள் போட்டுக் காரியத்திலும் நடத்தி வைக்கலாம் என்ற நம்பிக்கையானது இந்த எட்டயபுரம் ஞாபகார்த்த நிதியினால்தான் ஊர்ஜிதமாகியிருக்கிறது.

தமிழ் மக்களின் இதயத்தில் குமுறிக் கொண்டிருந்த ஆர்வத்தை அளப்பதற்கு இந்த எட்டயபுரம் நிதி ஒரு அளவு கோலாயிருந்திருக்கிறது. இத்தகைய ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்தித் தந்ததின் பொருட்டு எட்டயபுரம் பாரதி இலக்கிய மன்றத்தாருக்குத் தமிழ் மக்கள் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

* * *

பாரதியார் நிதிக்கு ஸ்ரீ வி. எல். நரசு இரண்டாயிரம் ரூபாய் கொடுத்தார். சில அன்பர்கள் ஐந்நூறு ரூபாய் நன்கொடைகள் அளித்திருக்கிறார்கள் ஆனால் நடுவில் ஆயிரம் ரூபாய் நன்கொடை ஒன்று இல்லாமலிருக்கிறதே என்று குறைப்பட்டுக் கொண்டிருந்தேன். அந்தக் குறையைத் தீர்த்து வைக்க, கடைசி தேதியில், மதுரைப் பிரமுகர் ஒருவர் முன்வந்தார். சௌராஷ்டிர சமூகத் தலைவரும், பிரபல வியாபாரியும், "ராயல் டாக்கீஸ்" சொந்தக்காரருமான ஸ்ரீ என். எம். ஆர். வெங்கடகிருஷ்ணய்யரின் ஆயிரம் ரூபாய் நன்கொடையைப் பெரு மகிழ்ச்சியுடன் பாராட்டுகிறேன்.

கலைத் துறையில் ஈடுபட்டவர்களில் கானகலாதார மணி ஐயரும் ஸ்ரீ பழனி சுப்பிரமணியப் பிள்ளையும் மனமுவந்து நன்கொடை யளித்திருக்கிறார்கள்.

ஜாபிதாவை முடிக்கும் தறுவாயில், கொடுமுடியிலிருந்து ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் அவர்களின் நூறு ரூபாய் நன்கொடை வந்து அளவற்ற குதூகலத்தைத் தந்தது.

இந்த நிதி விஷயத்தில் அக்கறை எடுத்துப் பணம் வசூலித்து அனுப்பிய நண்பர்கள்

எத்தனையோ பேர். அவர்களுடைய பெயர்கள் அவ்வப்போது வெளியாகியிருக்கின்றன. அவ்விதம் ஜாபிதாவில் காணப்படாத சில பெயர்களும் உண்டு. எட்டயபுரம் மகாராஜாவின் மைத்துனரும், பாரதியாரிடம் நேரில் பழகிய அபிமானியுமான ஸ்ரீ அமிருதசாமி அவர்கள் தூத்துக்குடியிலிருந்து ரூபாய் ஆயிரத்துக்கு மேல் அனுப்பினார்கள். எட்டயபுரத்து பாரதி இலக்கிய மன்றத்தின் தலைவர் ஸ்ரீ மு. கந்தசாமி செட்டியார் மதுரையில் ரூ. 500-க்கு மேல் வசூலித்து அனுப்பியிருக்கிறார். சேலத்திலிருந்து ஸ்ரீ எ. ஆர். முத்துசாமி என்னும் அன்பர் ஆயிரம் ரூபாய்க்குமேல் வசூலித்து அனுப்பியுள்ளார். இவர்களுக்கெல்லாம் எனது நன்றி.

இந்தப் பாரதி நிதியை நாம் ஆரம்பித்த உடனேயே மதுரை "கல்கி" ஏஜெண்ட் ஸ்ரீ எ. சண்முக சுந்தரம் பிள்ளை தீவிர ஊக்கம் எடுத்து மதுரைத் தமிழன்பர்களிடம் பணம் வசூலித்து அனுப்பினார். அதன் பிறகு நாடெங்குமுள்ள "கல்கி" ஏஜெண்டுகள் பலரும் மிக்க சிரத்தை எடுத்துப் பெரிதும் சிறிதுமான தொகைகள் வசூலித்து உடனுக்குடனே அனுப்பி வந்திருக்கிறார்கள் என்பதை மிக்க மகிழ்ச்சியுடன் குறிப்பிடுகிறேன்.

* * *

புது டில்லியில் நடக்கப் போகும் கதம்ப நிகழ்ச்சியைப் பற்றி முன் ஒரு இதழில் குறிப்பிட்டிருந்தேன். ஸ்ரீ எ. வி. ஒய். நாராயணன் அவர்களைத் தலைவராகக் கொண்ட புது டில்லி கர்நாடக சபையார் மேற்படி கதம்ப நிகழ்ச்சியை நடத்தி அதில் சேர்ந்த தொகை ரூ. 450 அனுப்பியிருக்கிறார்கள். மேற்படி கதம்ப நிகழ்ச்சியில் பங்கு எடுத்துக் கொண்டவர்கள் அனைவருக்கும் மனமார்ந்த நன்றி கூறுகிறேன்.

* * *

எட்டயபுரம் நிதி வசூல் சம்பந்தமாக இன்னும் ஒரு முக்கியமான நிகழ்ச்சி பாக்கியிருக்கிறது. அது, திருநெல்வேலியில் 24-ஆம் சனிக்கிழமை நடக்கப்போகும் ஸ்ரீ செம்பை வைத்தியநாத பாகவதரின் சங்கீதக் கச்சேரி தான். சிறுக ஆரம்பித்துப் பெரியதாக வளர்ந்துவிட்ட இந்த நன் முயற்சியின் சிகரமாக மேற்படி உதவிக் கச்சேரி அமைந்து, நிதியையும் பூர்த்தி செய்விக்கும் என்று நம்பிக்கையுடன் எதிர் பார்க்கிறேன்.

# சிவகாமியின் சபதம்

## அத்தியாயம் 54

## பாரவி இட்ட தீ

மகேந்திர சக்கரவர்த்தி சபா மண்டபத்துக்குள் பிரவேசித்ததும், அவ்விடத்தில் ஏற்பட்ட ஆரவாரத்தையும் கோலாகலத்தையும் சொல்லி முடியாது.

சற்று நேரம் ஒரே ஜயகோஷமாயிருந்தது.

மாமல்லர் பாய்ந்து சென்று மகேந்திர பல்லவரைத் தழுவிக்கொண்டார். மந்திரிகளும் அமைச்சர்களும் கோட்டத் தலைவர்களும் சம்பிரதாய மரியாதைகளைக் கூட மறந்தவர்களாய்ச் சக்கரவர்த்தியைச் சூழ்ந்து கொண்டார்கள். ஏக காலத்தில் பலர் பேச முயன்றார்கள்.

தளபதி பரஞ்சோதி மட்டும் சற்றுத் தூரத்தில் ஒதுப்புறமாக நின்றார். ஆனால் சக்கரவர்த்தியின் கண்கள் அவருடைய கண்களை அன்புடன் உற்று நோக்கின. "நான் சொன்னது சொன்னபடியே செய்து முடித்தாயல்லவா? ரொம்ப சந்தோஷம்!" என்ற செய்தியை மகேந்திர பல்லவரின் கண்கள் தெரிவித்தன. ஆனால் பரஞ்சோதியின் கண்களில் வெட்கத்தின் அறிகுறிதான் தோன்றியது. "நான்கூட ஏமாந்து போனேனல்லவா? சக்கரவர்த்தியைப் பற்றி இவ்வளவு தெரிந்திருந்தும், அவர் பகைவர்களால் சிறைப்பட்டிருக்கக் கூடும் என்று நம்பி விட்டேனல்லவா?" என்ற எண்ணத்தினால் அவ்வீர வாலிபர் வெட்கமடைந்தார் போலும்!

ஆரவாரம் சற்று அடங்கியதும், மகேந்திர சக்கரவர்த்தி சபையோரைச் சுற்றி வளைத்துப் பார்த்து, "ஏது, எல்லாரும் ஒரே குதூகலமாயிருக்கிறீர்கள்? உங்களுடைய உற்சாகத்தைப் பார்த்தால், யுத்தத்திலேயே ஜயித்து விட்டது மாதிரி தோன்றுகிறதே? நமது கோட்டைத் தளபதி மட்டும் சிறிது வாட்டமடைந்து காணப்படுகிறார். ஏனோ தெரியவில்லை!" என்ற போது எல்லாருடைய கண்களும் பரஞ்சோதியை நோக்க, அவருடைய வெட்கம் இன்னும் அதிகமாயிற்று.

முதன் மந்திரி சாரங்கதேவர் அப்போது, "பல்லவேந்திரா! தாங்கள் வருவதற்கு ஒரு விநாடி நேரத்துக்கு முன்னால்தான், நம் சைன்யத்தைக் கோட்டைக்கு வெளியே கொண்டு போய்ப் புலிகேசியுடன் போர் நடத்துவதாக நாங்கள் இங்கே தீர்மானித்திருந்தோம். தங்களுடைய வரவினால் அதற்கு இடமில்லாமற் போய் விட்டதே என்று நமது கோட்டைத் தளபதிக்கு வருத்தமாயிருக்கலாம்!" என்று கூறிவிட்டு, மாமல்லரை நோக்கினார்.

"என்ன? என்ன? நம்முடைய சைன்யத்தைக் கோட்டைக்கு வெளியே கொண்டு போவதாக உத்தேசமா? இந்த அபூர்வ யோசனையை யார் செய்தது? சேனாபதி! எப்படி என்னுடைய கட்டளையை மீறத் துணிந்தீர்? உமக்குக்கூட என்னிடம் நம்பிக்கை இல்லாமல் போய் விட்டதா?" என்று பல்லவேந்திரர் சிம்ம கர்ஜனை போன்ற குரலில் கேட்க, சேனாபதி கலிப்பகையார் தாழ்ந்த குரலில், "பிரபு!

கல்கி

தாங்கள் பகைவர்களால் சிறைப்பட்டிருப்பதைக் கேட்ட பிறகு நாங்கள் எப்படிக் கோட்டைக்குள் பதுங்கிக் கொண்டிருக்க முடியும்? தங்களை விடுவிக்க முடியாத பல்லவ சைன்யம் இருந்தென்ன, இல்லாமற் போயென்ன?'' என்றார்.

''ஆகா! நான் பகைவர்களால் சிறைப் பட்டிருந்தேனா? இது என்ன கதை?'' என்று சக்கரவர்த்தி கேட்ட போது, அங்கே கூடியிருந்தவர்களின் ஆச்சரியத்துக்கு அளவே யில்லாமல் போய் விட்டது.

முதன் மந்திரி சாரங்கதேவர், சற்று முன்னால் சக்கரவர்த்தியின் தூதன் என்று சொல்லிக் கொண்டு ஒருவன் வந்ததையும், அவன் கூறிய செய்தியையும், அதன் மேல் தாங்கள் தீர்மானித்ததையும் சுருக்கமாய்க் கூறினார்.

எல்லா வற்றையும் கேட்டு விட்டு, ''ஆகா! நாகநந்தி யடிகள் வெகு கெட்



டிக்காரர் என்று நான் நினைத்தேன். ஆனால் நான் நினைத்ததற்கு மேல் பொல்லாதவராயிருக்கிறார்! சற்றுத் தாமதித்திருந்தேனானால் காரியம் அடியோடு கெட்டுப் போயிருக்குமே!" என்றார் சக்கரவர்த்தி.

"பிரபு! அப்படியானால், அந்தத் தூதன் கூறியது பொய்யா? தாங்கள் பகைவர்களிடம் சிறைப்பட வில்லையா?" என்று சேனாபதி கலிப்பகையார் கேட்க, மகேந்திரர் கூறினார்:—

"அது பொய்தான். நான் பகைவர்களிடம் சிறைப்பட வில்லை. அப்படி நான் சிறைப்பட்டிருந்தாலும் என்னை விடுவிப்பதற்காக நீங்கள் படை திரட்டிக் கொண்டு புறப்பட்டிருக்க வேண்டியதில்லை. என்னை விடுவித்துக் கொள்ள எனக்குத் தெரியும். முன்பின் தெரியாத தூதனுடைய வார்த்தையை அவ்வளவுக்கு நீங்கள் நம்பி விட்டீர்களே? நாகநந்தி எதிரியின் ஒற்றன் என்பதை மாமல்லன் உங்களுக்குச் சொல்லவில்லையா? நமது கோட்டைத் தளபதி கூட உங்களுக்குத் தெரிவிக்கவில்லையா?"



"பிரபு! தாங்கள் சிறைப் பட்டீர்கள் என்ற செய்தி என்னுடைய அறிவைக் குழப்பி விட்டது. அதனால் மதிமயங்கி விட்டேன். பல்லவ குமாரரும் அதனால்தான் கலங்கிப் போய் விட்டார்" என்றார் பரஞ்சோதி.

"ஆம்: நான் எதிர்பார்த்ததைக் காட்டிலும் கெட்டிக்கார ஒற்றன்தான் நாகநந்தி. ஆகா! சற்று நான் தாமதித்திருந்தால்...!" என்று பெருமூச்சு விட்டார் மகேந்திரர்.

"பிரபு! அவன் ஒற்றனா? என்ன விந்தை! அப்படியானால் சிங்க இலச்சினை அவனிடம் எப்படி வந்தது?" என்று முதல் அமைச்சர் ரண தீர பல்லவராயர் கேட்டார்.

"நான்தான் அவனிடம் கொடுத்தேன். இந்த ஒற்றனைக் கைப்பிடியாய்ப் பிடிப்பதற்

காகவே நான் வடக்குப் போர் முனையி லிருந்து தெற்கே போயிருந்தேன்...''

"பிரபு! இதென்ன விந்தை? எதிரியின் ஒற்றனிடம் சிங்க இலச்சினை ஏன் கொடுத்தீர்கள்? அப்போது அவன் ஒற்றன் என்று தெரியாதா?''

"ஒன்பது மாதத்துக்கு முன்னாலேயே தெரியும். நமது கோட்டைத் தளபதி காஞ்சிக்கு வந்த அன்று அந்த சந்தேகம் எனக்கு உதித்தது. வாதாபி ஒற்றர்கள் பல்லவ ராஜ்யமெங்கும் பௌத்த சங்கங்களின் மூலமாக வேலை செய்து வருவதை அறிந்தேன். அவர்களை யெல்லாம் பிடிப்பதற்காக இத்தனை நாளும் நாகநந்தியை வெளியில் விட்டிருந்தேன். கடைசியில், கோட்டை முற்றுகை ஆரம்பிப்பதற்குள் நாகநந்தியைப் பிடித்து விட வேண்டு மென்று தான் தெற்கே போனேன். கடைசியில், மண்டபப் பட்டுக் கிராமத்தில் கண்டு பிடித்தேன்......''

"என்ன, மண்டபப் பட்டிலா?'' என்று மாமல்லர் தூக்கிவாரிப் போட்டவராகக் கேட்டார்.

"ஆமாம், மாமல்லா! மண்டபப் பட்டிலேதான். அங்கே ஆயனரையும் சிவகாமியையும் கூடப் பார்த்தேன். அவர்களை நீ வெள்ளத்திலிருந்து காப்பாற்றியது பற்றிச் சொன்னார்கள். சந்தோஷமா யிருக்கிறார்கள். ஆயனர் அங்கே மலைக் கோயில் அமைக்கும் பணியில் ஈடுபடுவதற்குத் தக்க ஏற்பாடு செய்து விட்டு வந்திருக்கிறேன். நாகநந்தியைத் தேடிக் கொண்டு மண்டபப் பட்டுக்குப் போனதில் இந்த ஒரு நன்மை ஏற்பட்டது.......''

ஆயனரும் சிவகாமியும் எதிரிகளின் ஒற்றர்கள் என்று நாகநந்தி கூறிய விஷங் கலந்த வார்த்தைகளினால் புண்பட்டிருந்த மாமல்லரின் உள்ளம் இதைக் கேட்டுக் குதூகலித்தது. அவருடைய மனத்தில் பொங்கிய உற்சாகம் முக மலர்ச்சியாகப் பரிணமித்தது.

"எதிரி ஒற்றனுக்குச் சிங்க இலச்சினை எப்படிக் கிடைத்தது?'' என்று முதன் மந்திரி மீண்டும் கேட்டார்.

"நான்தான் கொடுத்தேன், சாரங்க தேவரே! ஆனால், நேரில் அவன் கையில் கொடுக்க வில்லை. அந்தக் கெட்டிக்கார ஒற்றன் பக்கத்து அறையில் இருப்பதைத் தெரிந்து கொண்டு, ஆயனரிடம் 'ஏதாவது ஆபத்துக் காலத்துக்கு இருக்கட்டும்' என்று சொல்லி விட்டுக் கொடுத்தேன். அதை நாகநந்தி எடுத்துக் கொள்வதற்காகவே ஆயனரையும் சிவகாமியையும் வெளியே பாறைகளைப் பார்க்க அழைத்துப் போனேன். நான் எண்ணியபடியேதான் நடந்தது. இல்லை, நான் எண்ணியதற்கு மேலேயே கொஞ்சம் நடந்துவிட்டது. ஏகாம்பரேசுவரர் அருளால் நல்ல சமயத்துக்கு வந்து சேர்ந்தேன். நாகநந்தி இந்த மண்டபத்துக்குள்ளிருந்து வெளியேறியதும், நான் வந்து சேர்ந்ததும் பொருத்தமாயிற்று......''

"பிரபு! ஒற்றனைச் சிறைப்படுத்தியாகி விட்டதா?'' என்று சேனாபதி கலிப்பகை கவலை தோய்ந்த குரலில் கேட்டார். அவருக்குப் போர்க்களத்தில் யுத்தம் செய்யும் முறைதான் தெரியுமே தவிர, இந்தமாதிரி ஒற்றர் தந்திரங்களெல்லாம் அவருக்குத் தலைவேதனை யளித்தன.

"ஆம்; சேனாபதி! வாதாபியின் மிகவும் கெட்டிக்காரனான ஒற்றனைச் சிறைப்படுத்தி யாகிவிட்டது. பாதி யுத்தத்தை நாம் ஜயித்து விட்டது போலத்தான்!'' என்றார் சக்கரவர்த்தி.

உடனே மாமல்லர், தந்தையிடம் துள்ளி வந்து வணக்கத்துடன் கை கூப்பி நின்று, 'பல்லவேந்திரா! பாதி யுத்தத்தைத் தாங்கள் ஜயித்தாகி விட்டது. மிச்சப் பாதி யுத்தத்தை ஜயிக்க எனக்கு அனுமதி கொடுங்கள். நமது வீர பல்லவ சைன்யத்தை நடத்திக் கொண்டு போய் வாதாபி அரக்கர் சைன்யத்தை அடியோடு அழித்து நிர்மூலம் செய்ய அனுமதி கொடுங்கள். என் அருமைத் தோழர் பரஞ்சோதியையும் என்னுடன் அனுப்பி வையுங்கள்!'' என்றார்.

அப்போது மகேந்திர பல்லவர் மாமல்லரைத் தழுவிக் கொண்டு, "குழந்தாய்! உன்னுடைய வீரத்தை

மெச்சுகிறேன்; ஆனால், கொஞ்சம் நான் சொல்வதைக் கேள்!" என்று கூறி விட்டு, சபையோர்களைப் பார்த்து, "மந்திரிகளே! அமைச்சர்களே! கோட்டைத் தலைவர்களே! எல்லாரும் சற்றுச் செவி கொடுத்துக் கேளுங்கள். பல்லவ ராஜ்யத்துக்கு இந்தப் பெரிய விபத்து எப்படி வந்தது என்று சொல்கிறேன். இந்த யுத்தத்திற்கு ஆதி மூலமான காரணத்தை உங்களுக்குச் சொல்கிறேன். பிறகு, உங்களுடைய விருப்பம் என்ன என்பதை நீங்கள் எனக்குத் தெரிவியுங்கள்" என்றார்.

மகேந்திர பல்லவர் சபையோரைப் பார்த்துக் கூறினார் :—

"இளம் பிள்ளைப் பிராயத்தில் நான் யுத்தம் என்னும் எண்ணமே இல்லாதவனாயிருந்தேன். என் தந்தை சிம்ம விஷ்ணுவின் வீரப் புகழ் தென்னாடெங்கும் பரவியிருந்தது. நான் பிறப்பதற்கு முன்னாலேயே என் தந்தை சோழ நாட்டுக் களப்பாளர் வம்சத்தை நிர்மூலம் செய்து கீழைச் சோழ நாட்டைப் பல்லவ ராஜ்யத்துடன் சேர்த்துக் கொண்டார். உறையூர்ச் சோழர்களை அடக்கிக் கப்பம் கட்டச் செய்தார். பாண்டியர்களையும் கர்வபங்கம் செய்தார். மேற்கே கங்கரும் வடமேற்கே கதம்பரும் சிம்மவிஷ்ணு மகாராஜாவிடம் பயபக்தி கொண்ட நண்பர்களாயிருந்தார்கள். வடக்கே வேங்கி நாட்டரசனோ எனக்குத் தாய் மாமனாயிருந்தான். ஆகவே, யுத்தம் என்ற நினைவே இல்லாமல் நான் வளர்ந்து வந்தேன். சித்திரம், சிற்பம், கவிதை, சங்கீதம், நடனம் ஆகிய கலைகளில் ஈடுபட்டுக் காலம் கழித்தேன்.

எந்தெந்த தேசத்தில் என்னென்ன கலை சிறந்து விளங்கிற்று என்று கேள்விப் பட்டாலும், அங்கிருந்து அந்தக் கலையில் வல்லாரைத் தருவித்து இந்தப் பல்லவ நாட்டிலும் அக்கலைகளை வளர்க்க முயன்றேன்.

இப்படியிருக்கும்போது, கங்க மன்னன் துர்விநீதனுடைய சபையில் பாரவி யென்னும் வடமொழிக் கவி ஒருவர் வந்திருப்பதாகக் கேள்விப் பட்டேன். அவர் வடக்கே அசலபுரத்தில் இருந்தவர் என்றும், வாதாபி இராஜ குமாரர்களின் சிநேகிதர் என்றும் அறிந்தேன். புலிகேசியும் அவனுடைய சகோதரர்களும் சித்தப்பனுக்குப் பயந்து காட்டிலே ஒளிந்து திரிந்தபோது பாரவியும் அவர்களோடு கொஞ்சகாலம் அலைந்து திரிந்தாராம். பிறகு அவர் கங்க நாட்டு மன்னனுடைய சபையைத் தேடி வந்தார். துர்விநீதனுடைய பெண்ணைப் புலிகேசியின் தம்பி விஷ்ணுவர்த்தனனுக்கு மணம் பேசி முடித்தது. அவ்விதம் புலிகேசிக்குப் பலம் தேடிக் கொடுப்பதற்காகவே அவர் வந்ததாகப் பின்னால் தெரிந்தது.

துர்விநீதன் என்னுடைய தந்தைக்குப் பெரிதும் கடமைப்பட்டவன் என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆகையால் தலைக்காட்டில் நடக்கும் காரியங்கள் எல்லாம் அவ்வப்போது காஞ்சிக்குத் தெரிந்து கொண்டிருந்தன. பாரவி அங்கு வந்திருக்கிறார் என்று கேள்விப்பட்டதும், அவரைக் காஞ்சிக்கு வரவழைக்கலாமென்று நான் ஆசைப் பட்டேன். என் தந்தையும் அவ்விதமே துர்விநீதனுக்குச் செய்தி அனுப்பினார். அதன் பேரில் பாரவி இங்கு வந்தார்! வந்தவர் காஞ்சி சுந்தரியின் மேல் மோகங் கொண்டு விட்டார். இந்தக் காஞ்சி நகரின் திருக் கோயில்களும் கலைக் கூடங்களும் இராஜ வீதிகளும் மாட மாளிகைகளும் மல்லிகைப் பூக் கடைகளும் பாரவியை அடியோடு கவர்ந்து விட்டன. அதோடு நானும் அவரும் அத்தியந்த நண்பர்களானோம். காஞ்சியைப்போல் நகரம் கிடையாதென்றும் என்னைப்போல் ரஸிகன் கிடையாதென்றும் அவர் அடிக்கடி சொல்லுவார். கிராதார்ஜுனீயம் என்னும் காவியத்தைப் பாரவி இந் நகரிலே தான் இயற்றி அரங்கேற்றினார் என்பதை நீங்கள் அறிவீர்கள். அவருடைய சிஷ்யர் தண்டியைப் பற்றியும் உங்களுக்குத் தெரியும்.

ஆனால், உங்களுக்கு என்ன தெரியாதென்றால், புலிகேசி வாதாபி சிம்மாசனத்தில் ஏறிய பிறகு, அவனும் அவன் தம்பி விஷ்ணுவர்த்தனனும் பாரவிக்கு ஓலைக்கு மேல் ஓலையாக விடுத்துக்கொண்டிருந்தார்கள்.

வாதாபிக்குத் திரும்பி வந்து விடும் படியாகத்தான். ஆனால் பாரவி அதற்கெல்லாம் மசிய வில்லை. காஞ்சியை விட்டுப் போவதற்கு அவருக்கு மனம் வரவில்லை. 'காஞ்சியில் வசித்தவனுக்கு வேறு நகரில் வசிக்க மனம் வருமா?' என்று அவர் சொல்வார். எனவே, புலிகேசியின் ஓலைகளுக்கெல்லாம் பாரவி தம்மால் வர முடியாதென்று மறு ஓலை அனுப்பி வந்தார். அந்த ஓலைகளில் சிலவற்றை எனக்கும் அவர் படித்துக் காட்டியதுண்டு. அவற்றில் காஞ்சி நகரைப் பற்றிப் பிரமாதமான வர்ணனைகள் செய்திருந்தார். அந்த ஓலைகளில் ஒன்றிலேதான்,

'புஷ்பேஷு ஜாதி
புருஷேஷு விஷ்ணு
நாரீஷு ரம்பா
நகரேஷு காஞ்சி'

என்ற சுலோகத்தை அவர் எழுதினார். இதையெல்லாம் அப்போது படிக்கையில் எனக்கு எவ்வளவோ சந்தோஷமாயிருந்தது. ஆனால் அப்போது பாரவி இட்ட தீயே இப்போது இந்த யுத்தமாக மூண்டிருக்கிறது. அவருடைய காஞ்சி நகர் வர்ணனைகளின் பலன் இவ்வளவு விபரீதமாகப் போகிறதென்று நான் கனவிலும் எண்ண வில்லை. புலிகேசி பாரவிக்கு எழுதிய ஓலை ஒன்றில், 'என்றைக்காவது ஒரு நாள் நான் காஞ்சி நகருக்கு வருவேன்; நீர் செய்திருக்கும் வர்ணனையெல்லாம் உண்மைதானா என்று பார்ப்பேன்' என்று எழுதியிருந்தான். அதுவும் எனக்குப் பெருமையாயிருந்தது அப்போது! வாதாபி சக்கரவர்த்தி காஞ்சிக்கு வரும்போது அவருக்குப் பிரமாதமான வரவேற்பு நடத்த வேண்டுமென்று எண்ணியிருந்தேன். ஆனால், சபையோர்களே! நான் நினைத்ததற்கு மாறான முறையில் கோட்டைக் கதவுகளைச் சாத்தி வாதாபி சக்கரவர்த்தியை இப்போது வரவேற்க வேண்டியிருக்கிறது......''

இத்தனை நேரமும் சபையோர் அனைவரையும்போல ஆவலுடன் மகேந்திரர் கூறிய வரலாற்றைக் கேட்டுக் கொண்டிருந்த மாமல்லர் குறுக்கிட்டு, "இதுதான் எனக்கு விளங்கவில்லை. எதற்காக நாம் கோட்டைக் கதவுகளைச் சாத்த வேண்டும்? பல்லவ வீரர்களின் வேல்களையும் வாள்களையும் கொண்டு புலிகேசியை ஏன் வரவேற்கக் கூடாது?'' என்றார்.

"அப்படியுந்தான் வரவேற்கப் போகிறோம். நமது கோட்டைச் சுவர்களின் மீது பல்லவ வீரர்கள் நின்று, வாள்களாலும் வேல்களாலும் சளுக்கர்களை வரவேற்கப் போகிறார்கள். வரவேற்று நமது அகழிகளிலுள்ள முதலைகளுக்கு விருந்தளிக்கப் போகிறார்கள். நீயும் நமது கோட்டைத் தளபதியுந்தான் இந்த வரவேற்பையும் விருந்தையும் நடத்தப் போகிறீர்கள் ...''

"அப்பா!..." என்று மாமல்லர் ஏதோ சொல்ல வாயெடுத்தார்.

"குமாரா! கொஞ்சம் நான் சொல்ல ஆரம்பித்ததை முழுதும் சொல்லி விடுகிறேன். அந்த அரக்கன் புலிகேசி நமது காஞ்சி சுந்தரியின் மேல் எத்தகைய மோகம் கொண்டிருக்கிறான் என்பதை நானே நேரில் பார்த்தேன். ஆகா! காஞ்சியை வர்ணிக்க ஆரம்பித்ததும், அவனுடைய கண்கள் எப்படி ஜொலித்தன தெரியுமா...?''

"பிரபு! இதென்ன? புலிகேசியைத் தாங்கள் பார்த்தீர்களா? எங்கே? எப்போது?'' என்று சாரங்க தேவ பட்டர் கேட்டார்.

"வெண்ணாற்றங் கரையில் சளுக்கர் படைக்கு நடுவில் புலிகேசியை நான் பார்த்தேன் ......''

"என்ன உண்மையாகவா?'' என்று சேனாபதி கலிப்பகை திடுக்கிட்டுக் கேட்டார்.

"பிரபு! இப்படியெல்லாம் தங்களை அபாயத்துக்கு உட்படுத்திக் கொள்ளலாமா, இந்தப் பெரிய பல்லவ சாம்ராஜ்யம் தங்கள் ஒருவரையே நம்பியிருக்கும்போது?'' என்றார் முதல் அமைச்சர் ரணதீர பல்லவராயர். சபையில் நாலு பக்கங்களிலும் கசுமுசு என்று மெதுவாகப் பேசிக்கொள்ளும் சத்தம் எழுந்தது.

மகேந்திரபல்லவரின் துணிச்சலையும் சாகஸத்தையும் மெச்சிய போதிலும் "சக்கரவர்த்தி இப்படியெல்லாம் செய்யக் கூடாது!'' என்று சபையோர் ஏகமனதாக அபிப்பிராயப் பட்டதாகவும் தோன்றியது.



# மாமன் எதிர்க்கட்சி

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

நகுல சகதேவர்களின் தாயார் மாத்திரிக்கு மத்திர தேசாதிபதி சல்லியன் உடன் பிறந்த சகோதரன். பாண்டவர்கள் உபப்பிலாவ்ய நகரத்தில் யுத்தத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து வருகிறார்கள் என்று பராரியாகக் கேட்டுச் சல்லியன் உடனே பெரியதொரு சேனையைத் திரட்டிக் கொண்டு பாண்டவர்களுக்குத் துணை போகத் தீர்மானித்தான்.

உபப்பிலாவ்யம் நோக்கிச் செல்லுகையில் இளைப்பாறுவதற்காகச் சேனையை அங்கங்கே நிறுத்தினான். அவ்வாறு முகாம் போட்ட இடங்களில் ஒன்றரை யோஜனை நீளத்துக்கு அவன் சேனை பரவி நின்றதாம். ஒரு யோஜனை என்றால் சுமார் ஒன்பது மைல் நீளம்.

• • •

மத்திர தேசாதிபதி பெரிய சேனையைத் திரட்டிக் கொண்டு பாண்டவர்களைச் சேரும் எண்ணத்தோடு போய்க் கொண்டிருக்கிறான் என்ற செய்தி துரியோதனனுக்கு எட்டியதும் அவன் இதை எப்படியாவது தடுத்துச் சல்லியனைத் தன் பக்கம் சேரும்படி செய்ய வேண்டுமென்று ஆலோசித்துத் தன் உத்தியோகஸ்தர்களை அழைத்து உடனே சல்லியனுக்கும் அவன் பெரும் படைக்கும் எல்லாவித உபசாரமும் சௌகரியங்களும் செய்ய உத்தரவிட்டான். அரசன் கட்டளைப்படி அழகாய் அலங்கரிக்கப் பட்ட பல மண்டபங்கள் வழியில் அங்கங்கே கட்டப்பட்டு, சல்யனுக்கும் அவன் சேனைக்கும் அற்புதமான உபசாரம் செய்யப்பட்டது. தின்பண்டங்களும் பலவித பானங்களும் ஏராளமாகப் பரிமாறப் பட்டன. வழி முழுதும் இவ்வாறு உபசாரங்கள் செய்யப்பட்டதில் மத்திர தேசாதிபதி சல்லியனுக்கு மிகுந்த சந்தோஷமுண்டாயிற்று.

இதுவெல்லாம் தன் மருமகன் யுதிஷ்டிரன் செய்த ஏற்பாடு என்று சல்லியன் எண்ணினான். உபசாரங்களைப் பெற்றுக் கொண்டு ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் பெருஞ் சேனையுடன் பூமி அதிரச் சென்று கொண்டிருந்தான். தன்னை யுதிஷ்டிரன் இவ்வளவு கௌரவிக்கிறானே என்று களிப்புற்ற சல்லியன் ஒரு நாள் உபசரித்த வேலைக்காரர்களை அழைத்து, "இவ்வளவு அன்புடனும் கவனத்துடனும் என்னையும் என் சேனையையும் உபசரித்தவர்களுக்கு நான் தக்க பரிசுகொடுக்க வேண்டும். குந்தி புத்திரன் இதற்குச் சம்மதிக்க வேண்டும். என் சார்பில் அவருக்குச் சொல்லி அனுமதி பெற்று வாருங்கள்" என்று சொன்னான். இதை வேலைக்காரர்கள் துரியோதனனிடம் போய்ச் சொன்னார்கள். உபசாரம் செய்த கூட்டத்துடன் கூடவே மறைந்து கொண்டிருந்த துரியோதனன் அப்போது சல்லியன் முன்வந்து நின்று வணங்கினான்.

"இவ்வளவு உபசாரமும் நீயா செய்தாய்?" என்று சல்லியன் ஆச்சரியப்பட்டுத் துரியோதனனை "உனக்கு நான் என்ன உபகாரம் செய்வேன்?" என்றான் ஆலிங்கனம் செய்து.

புராணங்களில் தருமோபதேசமும் உலகத்தின் போக்கும் கலந்து கலந்து வரும். இதைக் கண்டு சிலர் தயக்கம் அடைகிறார்கள். இதுவென்ன புராணம் அதர்மத்தை உபதேசம் செய்கிறதே? இவ்வாறு அநியாயத்தையெல்லாம் பிரசாரம் செய்யலாமா? என்று சிலர் கேள்விகள் கிளப்புவது உண்டு.

தருமோபதேசமே நோக்கமாயினும் உலகத்தில் நடைபெறும் குற்றங் குறைகளை எடுத்துக்காட்டி, நல்லவர்களும் படித்தவர்களும் எல்லாரும் பாராட்டிவரும் மகாத்மாக்களும் கூடச் சில சமயங்களில் குழியில் விழுவார்கள் என்பதை மனத்தில் பதிய வைக்க வேண்டுமல்லவா? ஆகையினாலே, புராணங்களில் அநேக இடங்களில் இவ்வாறான கட்டங்கள் இருக்கும். பெரியோர்களும் மகான்களும் அவதார புருஷர்களும் சில சமயம் பிழைகளும் அதரும காரியங்களும் செய்த நிகழ்ச்சிகளைச் சித்தரித்து அவற்றினால் அடக்கமும் இடைவிடாத கண் விழிப்பும் வேண்டும் என்பதை நன்றாகப் பதியும்படி உணர்த்துகின்றன. பக்தியும் அபார கவித்திறமையும் செலுத்தி ஆக்கப்பட்ட இந்த நூல்களின் பெருமை வியப்புக்குரியது.

ஸ்ரீ ராமசந்திரனும் யுதிஷ்டிரனும் செய்யக்கூடாததைச் சில சமயம் செய்ததாகப் பௌராணிகர் எழுதவேண்டிய அவசியம் என்ன? யாருடைய நிர்ப்பந்தமுமில்லை. எழுதி அதற்குப் பரிகாரம் சொல்லிக் குழப்புவதற்கு ஒரு அவசியமுமில்லை. வால்மீகியே அதைக் கற்பனை செய்து எழுதியிருக்கிறார். வியாசரே எழுதியிருக்கிறார். வேறு யாரோ எழுதி விட்டிருப்பதற்கு இவர்கள் சமாதானம் சொல்ல முன் வரவில்லை. வியாசரும் வால்மீகியுமே தருமசங்கடங்களை உண்டாக்கி (கதையின் போக்கை நிருமாணித்துக்கொண்டு) அநீதியும் அதருமமும் செய்ய நேரிட்டதாக எழுதியிருக்கிறார்கள். புராண ஆசிரியர்கள் கையாண்டிருக்கும் முறையின் பயனாகப் புராணத்தைப் படிக்கும் மக்களுடைய உள்ளத்தில் மொத்தத்தில் தருமோபதேசமே பதிகிறது. அநீதிகளும் பிழைகளும் நடந்த கட்டங்கள் மனத்தில் துயரத்தை உண்டாக்கி நிற்கின்றனவே யொழிய அநீதியை யாவது அதர்மத்தை யாவது நாமும் செய்யலாம் என்று தோன்றும் முறையில் பிரசாரம் செய்யப்படவில்லை. இடையறாக் கண் விழிப்பும் பாபச் செயல்களில் பயமும் அடக்கமும் தரும சிந்தனையுமே உண்டாகின்றன.

தற்காலத்து சினிமாக்களிலும் செய்யப்படாத காரியங்கள் காட்டப்படுகின்றன. இதைப்பற்றிச் சினிமாக்காரர்கள் சொல்லும் சமாதானங்கள் பல விருந்தாலும் மனத்தைக் கவரும் படியான முறையில் தீய காரியங்கள் காட்டப்பட்டு மக்களை அவ்வழியில் செல்லும்படி செய்கின்றன. புராணங்கள் அவ்வாறு இல்லை. அவற்றில் பெரியோர்களை சிற்சில சமயம் பாபத்திலும் பிழைகளிலும் இறங்கினதாக வரைந்திருந்த போதிலும், அவ்வழியில் நாம் தூண்டப்படுகிறதில்லை. புராண நூல்களுக்கும் பேசும் படங்களுக்கும் இதுவே பெரிய வித்தியாசம்.

* * *

துரியோதனன் செய்வித்த மகத்தான உபசாரத்தினால் மதிமயங்கிச் சல்லியன் தன் நெருங்கிய பந்துக்களும் தன்னுடைய அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரர்களுமான பாண்டவர்களை விட்டு விட்டுத் துரியோதனனுக்குத் துணையாக அவன் பக்கம் சேர்ந்து யுத்தம் புரிவதாக வாக்குக் கொடுத்தான்.

"உமக்குப் பாண்டவர்கள் எப்படியோ அப்படியே நானும். எனக்கு நீர் துணையாக இருக்க ஒப்புக்கொள்ள வேண்டும்" என்று துரியோதனன் கேட்டதும், சல்யன் "அப்படியே ஆகட்டும்" என்றான். யுதிஷ்டிரனை அடையப் புறப்பட்ட மாமன் எதிர்ப்பக்கத்தைச் சேர்ந்துவிட்டான்!

அரசர்கள் செய்யும் உபசாரத்தைப் பெற்றுக் கொண்டால் இத்தகைய ஆபத்து நேரிடும். அரசர்கள் பின்பற்ற வேண்டிய ராஜநீதியும் இதனால் எடுத்துக் காட்டப்படுகிறது.

* * *

பிறகு சல்லியன் யுதிஷ்டிரனைப் பாராமலே திரும்புவது சரியல்லவென்று நினைத்து, "துரியோதனா! நீ என்னை நம்பு. நான் உனக்கு வாக்குத் தந்துவிட்டேன். ஆயினும் யுதிஷ்டிரனைப் பார்த்துவிட்டுத் திரும்புகிறேன். அவனுக்கு நான் சொல்லிவிட வேண்டியது அவசியம்" என்றான்.

"பார்த்துவிட்டுச் சீக்கிரம் திரும்பி வாரும்; எனக்குக் கொடுத்த வாக்கை மறக்க வேண்டாம்" என்றான் துரியோதனன்.

"உனக்கு மங்களம். நீ உன் நகரத்துக்குத் திரும்பிப்போ. நான் மோசம்

செய்யமாட்டேன்'' என்று சல்லியன் சொல்லிவிட்டு யுதிஷ்டிரன் இருந்த உபப்பிலாவ்ய நகரத்துக்குப் போனான்.

அந்த நகரத்தண்டை போனதும் மத்திர தேசாதிபதியை மிகுந்தமகிழ்ச்சியுடன் எதிர்கொண்டு வரவேற்றார்கள். நகுல சகாதேவர்கள் தங்கள் மாமன் வந்ததைக் கண்டு அளவு கடந்த சந்தோஷம் அடைந்தார்கள். பாண்டவர்கள் தாங்கள் பட்ட கஷ்டங்களை யெல்லாம் சொன்னார்கள். வரப்போகும் யுத்தத்தில் சல்லியனுடைய துணையைப் பெறுவதைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்கள். அப்போது சல்லியன் தான் துரியோதனனுக்கு வாக்குத் தந்து விட்டதைப் பற்றிச் சொன்னான்.

மாமனாயிற்றே என்று தான் அஜாக்கிரதையாக இருந்ததனால் உண்டான பயன் இது என்று யுதிஷ்டிரன் அறிந்தான். தன் வருத்தத்தை அதிகமாகக் காட்டிக் கொள்ளாமல், "வீரரே! நீர் துரியோதனன் செய்த உபசாரத்தினால் மகிழ்ச்சியடைந்து அவனுக்குச் செய்த வாக்குத்தத்தத்தை நிறைவேற்ற வேண்டியதே. நீர் யுத்தத்தில் வாசுதேவருக்கு நிகரானவர். அருச்சுனனைக் கொல்வதற்காகக் கர்ணன் உம்மைத் தன்னுடைய சாரதியாக வைத்துக் கொள்வான். அருச்சுனனுடைய மரணத்துக்கு நீர் காரணமாகப் போகிறீரா? அல்லது அருச்சுனனை அப்போது காப்பாற்றுவீரா? இதை நான் கேட்கத் தகாது. ஆயினும் கேட்டுக் கொள்ளுகிறேன்'' என்றான் யுதிஷ்டிரன்.

"அப்பனே! நான் வஞ்சிக்கப்பட்டுத் துரியோதனனுக்கு வாக்குத்தத்தம் செய்து விட்டேன். அவன் பக்கத்தில் நின்று உங்களுக்கு விரோதமாகவே யுத்தம் செய்வேன். ஆயினும் கர்ணன் அருச்சுனனை எதிர்க்கச் செல்லும்போது என்னைச் சாரதியாக அழைத்தால், என்னால் கர்ணனுடைய தேஜஸ் பங்கப்பட்டு அருச்சுனன் காப்பாற்றப் படுவான். அஞ்சவேண்டாம். சூதாட்டத்தில் சிக்குவிக்கப்பட்டு திரௌபதியும் நீங்களும் அடைந்த துயரங்கள் முடிந்தன. இனி உங்களுக்கு மங்களம் உண்டாகும். விதியின் போக்கை யாரும் தடுக்க முடியாது. நான் செய்த பிழையைப் பொறுத்துக்கொள்'' என்றான்.

1




2




3







சிபா—

# தென் இந்தியா ரயில்வே

## கும்பகோணத்தில் மகாமக உத்ஸவம்

**பிப்ரவரி 1945**

★

1945 பிப்ரவரி மாதம் கும்பகோணத்தில் நடக்கப் போகும் மகாமக உத்ஸவத்தின் பொருட்டு எந்த விதமான விசேஷ ஏற்பாடும் செய்ய இயலாமல் இருப்பதையும் ஷை உத்ஸவ காலத்தில் யாதொரு ஸ்பெஷல் டிரெயினும் விடுவதற்கு இல்லை என்பதையும் தென் இந்தியா ரயில்வேயார் மிகமிக வருத்தத்துடன் பொது ஜனங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறார்கள். டிரெயின்களில் ஜன நெருக்கடி ஏற்படாமல் தடுக்கும் பொருட்டு ஸ்டேஷன்களில் டிக்கட் கொடுப்பது கட்டுப்படுத்தப்படும். ஆகவே ஷை உத்ஸவத்தின் பொருட்டு கும்பகோணத்திற்கு ரயில் மூலம் பிரயாணம் செய்ய வேண்டாம் என்று பொது ஜனங்கள் எச்சரிக்கப்படுகிறார்கள். யுத்த கால நிலைமையின் காரணமாக இவ்வாறு முடிவு செய்யும்படியான நிர்ப்பந்தத்தை எவ்வளவுதான் வருந்திய போதிலும் தவிர்க்க முடியாத வகையில் ரயில்வேயாருக்கு நேர்ந்திருக்கிறது.

# 2-வது வெற்றிகரமான வாரம்

காரைக்குடி
தஞ்சாவூர்
சித்தூர்
காகிநாடா

ஏலூர்
மதனபள்ளி
பெர்ஹாம்பூர்
ராமசந்திரபுரம்






★

Y. V. ராவ்
கமலா கோட்னிஸ்
பானுமதி
நாராயண ராவ்
நடித்தது

★

★

டைரக்ஷன் :
Y.V. ராவ்

★

**நரஸு ரிலீஸ்**

I. A. C. T/K. 1




# தேவியின் சிலை

★ ★ ★ ★

கி. நா. கிருஷ்ணமூர்த்தி

அவளது முகத்தில் நாணத்திற்குப் பதில் ஒருவித ஆவேசம்தான் இப்பொழுது குடி கொண்டிருந்தது. அவனை எரித்துச் சாம்பலாக்கி விடுவதுபோல் பார்த்தாள். நேற்றுப் பார்த்த அவளா இவள் என்ற சந்தேகம் உண்டாகியது சங்கமனுக்கு. "அப்பா எப்படி இருக்கிறார்? உடல் நலம் எப்படியிருக்கிறது?" என்று விநயமாகக் கேட்டான். ஆனால் "அதைப் பற்றி உங்களுக்கென்ன?" என்ற அவளது பதில் அவனைத் திடுக்கிடச் செய்தது. அவனால் அவளை அறிந்து கொள்ள முடியவில்லை. அவளாலும் அதற்குமேல் தன் உணர்ச்சிகளை அடக்கி வைக்கக் கூடவில்லை. "நீங்கள் யார்? எதற்காக என் தந்தையைப் பார்க்கவேண்டும்? அவருடைய உடல் நலம் குன்றி வருந்துவதற்கு நீங்களும் உங்கள் கலையும்தானே காரணம்? நீங்கள் அவரைப் பார்ப்பதால் அவருக்கு என்ன பயன்? மனவருத்தம்தான் உண்டாகும்" என்று தன்னைமறந்து மட மட வென்று பேசினாள்.

சங்கமனுக்குப் பேச வேண்டும் என்று தோன்றவில்லை. திரும்பி மௌனமாக நடந்தான். அவனுடைய மனத்தில் ஒரு பெரும் போராட்டம் நடந்து கொண்டிருந்தது. சொக்கநாதரின் உடல் நலம் குன்றி வருந்துவதற்குத் தானும் தன் கலையும் எவ்வாறு காரணம் என்பது அவனுக்கு விளங்கவே இல்லை.

சங்கமன் அவ்விடத்தை விட்டுச் சென்ற பின் வள்ளி கோவென்று கதறி அழுது விட்டாள். அவளது பெண்மைக் குணம் முன்னின்றது. தனது தந்தையின் உடல் நலத்தை அறிந்து போக வந்த அந்த இளைஞரை ஏன் அவ்வாறு கோபித்தோம்? அவரிடம் போய் மன்னிப்புக் கேட்டுவிடுவது என்று எழுந்தாள். ஆனால் அப்பொழுதுதான் நித்திரையிலிருந்து எழுந்த சொக்கநாதர், வள்ளியின் அழுகுரல் கேட்டு எழுந்து குடிசைக்கு வெளியே தட்டுத் தடுமாறிக் கொண்டு வந்து விட்டார். கண்கள் இன்னும் மருந்து வைத்துக் கட்டப்பட்டிருந்தன. வள்ளி கண்களைத் துடைத்துக் கொண்டு எழுந்து ஓடிச் சென்று, அவரது கைகளைப் பற்றி அழைத்துப் படுக்கையில் படுக்க வைத்தாள். "அம்மா, ஏன் அழுதாய்? எனக்கு ஒன்றும் நேராது. நீ பயப்படவேண்டாம்" என்று அவர் மகளுக்குத் தேறுதல் கூறினார்.

வழியெல்லாம் சிந்தனை செய்து கொண்டு சென்ற சங்கமனுக்கு ஒன்றே ஒன்றுதான் புலப்பட்டது. வள்ளியின் கோபத்திற்குக் காரணம் தான் செதுக்கி யிருக்கும் சிற்பமாகத்தான் இருக்க வேண்டும். கலைப் போட்டியில் அவனும் போட்டி யிடுகிறான். நேற்றைய தினம் தனது குடிசையை நாடி வந்தது தன்னைப் பார்ப்பதற்காக அல்ல. தன்னுடைய சிற்பத்தைப் பார்க்கத்தான் இருக்க வேண்டும். ஆனால் சொக்கநாதரின் உடல் நலம் குன்றியதற்குத் தானும் தனது கலைச் செல்வமும் எவ்வாறு காரணமாய் இருக்க முடியும்? இது அவனுக்கு விளங்கவே இல்லை. அவன் குடிசையை அடையும் பொழுது சந்திரிகை கீழ்வானில் தோன்றி ஒரு நாழிகை ஆகியிருந்தது. நேரே சிலைத் தருகே சென்றான். தனியே பூரண எழில் பெற்று நின்ற வீராங்கனையின் முன் கரம் குவித்து நின்று "தேவி, என்னை மன்னித் தருள். பிறருடைய தீமைகளுக்குக் காரணமாகியிருக்கும் எனது கலைச் செல்வம் அழிய அருள் புரி. கலைஞன் என்ற பெயருடன் நான் வாழ விரும்பவில்லை" எனக் கூறிக் கொண்டே கீழே கிடந்த சிறு பாறை ஒன்றை எடுத்து ஜீவன் நிறைந்த அந்த தேவியின் சிலையின்மேல் வீசி எறிந்தான். அப்பாறை தேவியின் மார்பகத்தைப் பெயர்த்துக்கொண்டோடியது. சங்கமன் மறுமுறையும் பாறையை எடுத்து வீசி எறியக் கையை ஓங்கினான். பாதுகைகளின் சப்தம் கேட்டுத் திரும்பினான். இளங்கோ அடிகள் அவனை நோக்கி வந்து கொண்டிருந்தார். அந் நிலையில் அடிகள் தன்னைப் பார்த்து விட்டதை அறிந்து வெட்கப்பட்டான். அவனை நெருங்கிய அடிகள், தேவியின் சிலையைப் பார்த்துக் கொண்டே "இப்பொழுதுதான் தேவியின் சிலை பரிபூரணத்துவம் பெற்று விளங்குகிறது. இத்துடன் நிறுத்தி விடு. வீராங்கனை கண்ணகி தேவி மதுரையம்பதியைச் சாம்பலாக்கிக் கற்பின் வெற்றிகண்ட நிலையில் இப்படித்தான் காட்சி தந்தாள்" என்றார்.



"அடிகளே! என் மனத்தில் சில சந்தேகங்கள் இருக்கின்றன. அவை இன்னும் தீர்ந்தபாடில்லை" என்றான்.

"அப்படித் தீராத சந்தேகங்கள்தான் என்ன?" என்ற அவருடைய ஆதரவான பதில் அவனைப் பேசத் தூண்டியது.

"கலைச் செல்வத்தினால் மனிதன் அடையும் பயன் என்ன? வாழ்க்கையின் மலர்ச்சியா அல்லது அதன் அழிவா?"

"ஏன் இந்தச் சந்தேகம்? கலை மனிதனின் வாழ்க்கையை என்றென்றும் மலரச் செய்கிறது. கலை அமரத்வம் பெற்றது. கலைஞன்தான் வாழ்கின்றான். அவனது வாழ்க்கை ஒன்றுதான் பூரண மலர்ச்சி அடைகிறது. அவனது கலையினால் மக்களின் வாழ்க்கையும் மலர்ச்சி அடைகிறது."

"அடிகளே! ஒருவனுடைய கலைச் செல்வம் பிறருடைய அழிவுக்கும் காரணமாக அமையுமா?"

"சங்கமா! எதற்காக இந்தச் சந்தேகங்கள்? இப்படிப்பட்ட அழிவுக்குக் காரணமான கலைச் செல்வம் தானே அழிந்து ஒழியும். அது ஜீவனற்றதாகத்தான் இருக்கும். அக்கலைஞனும் அழிந்து போவான். உலகம் உள்ளளவும் அவன் பழித்துக் கூறப்படுவான்."

"அடிகளே, என்னுடைய கலைச் செல்வம் அப்படிப்பட்டதுதான். என் கையாலேயே எனது கலைச் செல்வமும் அழிந்து போக வேண்டும்."

அடிகளுக்குச் சங்கமனிடம் ஏற்பட்டிருந்த அன்பு இன்று மதிப்பாகப் பரிணமித்தது. "சங்கமா! இன்னும் ஒரே ஒரு தினம் பொறுத்திரு. உன்னுடைய கலை ஜீவன் நிறைந்ததா அல்லவா என்பதை இதோ நம் முன் நிற்கும் தேவியின் மூலம் உலகம் அறியும். கலைஞர்களின் கூட்டம் உன்னை ஒரு உண்மைக் கலைஞன் என்பதை ஒப்புக் கொள்ளும். என்னுடன் வா, சொக்கநாதரைப் பார்த்து வருவோம்" என்று கூறினார். சங்கமன் அவரைப் பின் தொடர்ந்து நடந்தான்.

அடிகளும் சங்கமனும் சொக்கநாதரின் ஆசிரமத்தை அடையும் பொழுது வெளி முற்றத்தில் தேவியின் முன் அமர்ந்து தலை வணங்கிக் கைகூப்பித் தொழுது



கொண்டிருந்தாள் வள்ளி. அந் நிலையில் அவளைக் கண்ட அடிகள் பாதுகைகளை ஆசிரமத்திற்கு வெளியிலேயே விட்டுவிட்டுச் சங்கமனுடன் உள்ளே வந்து வள்ளிக்குப் பின் சிறிது தூரத்தில் நின்று கொண்டிருந்தார். தேவியின் வழிபாட்டில் தன்னை மறந்து வணங்கிக் கொண்டிருந்த வள்ளிக்கு அவர்கள் வந்திருப்பது இன்னும் தெரியாது.

"தேவி! உன்னை ஒரே ஒரு வரம் கேட்கின்றேன். நிரபராதியான சங்கமனின் மேல் குற்றம் சாட்டினேன். மாசு மறுவற்ற அவரது உள்ளத்தைப் புண்படுத்தினேன். அவரையும் அவரது கலையையும் பழித்துக் கூறினேன். அவருடைய அன்புக்கு நான் உரியவளாக முடியாது. எனினும் அவருடைய மன்னிப்புக்காவது நான் பாத்திரமாக வேண்டும். இந்த ஒரு வரம்தான் உன்னிடம் நான் வேண்டுவது" என்று கூறிக் கொண்டே தேவியின் பாதகமலங்களில் துவண்டு வீழ்ந்தாள்.

அடிகளின் கவியுள்ளத்திற்கு எல்லாம் தெட்டெனப் புலப்பட்டன. தன் பின்னே கைகட்டி நின்ற சங்கமனைத் திரும்பிப் பார்த்தார். அவனுடைய கண்களில் நீர் நிறைந்திருந்தது. தலை கவிழ்ந்து சோகமே உருவாய் நின்றான். "சங்கமா" என்றதும் தலை நிமிர்ந்தான். அவன் கண்களிலிருந்து இரண்டு துளி நீர் உருண்டோடித் தரையில் விழுந்தது.

"எல்லாம் தேவியின் அருள்! வா தேவியை வணங்குவோம்" என்று தேவியின் முன்னர் அழைத்துச் சென்றார்.

தன் பின்னே காலடிச் சப்தம் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்த வள்ளி திரும்பிப் பார்த்தாள். அடிகளையும் சங்கமனையும் கண்டவுடன் கண்களைத் துடைத்துக் கொண்டு நாணம் மேலிட்டுத் தலை குனிந்து வணங்கி நின்றாள். அடிகள் அவளது கைகளை ஆதரவுடன் பற்றிச் சங்கமனின் கைகளில் வைத்து, "வள்ளி! இந்த இளைஞனின் மன்னிப்பைத்தானே கோரினாய்? தேவியின் அருளுக்குப் பாத்திரமாக அவன்தான் உன் மன்னிப்பைக் கோர வேண்டும். கற்புத் தெய்வம் கண்ணகி உன் இனம். அவளது சீற்றத்திற்கு ஆளாகாமல் அவனைக் காப்பாற்ற வேண்டியது உனது கடன். தேவியின் சிலையை உடைத்துத் துகள் துகளாகச் செய்து உனக்குச் சொந்தமான அவனது வாழ்க்கையைப் பாழ்படுத்த இருந்தான். ஆனால் உனது கற்பின் மகிமையால் அவன் காப்பாற்றப்பட்டான். நீதான் அவனை மன்னிக்க வேண்டும். உங்கள் இருவருடைய வாழ்க்கையும் தேவியின் அருளால் சீர்தூம் பெற்று இன்பமயமாய் விளங்கும்" என்று கூறி இருவரையும் வாழ்த்திவிட்டுக் குடிசையினுள் நுழைந்தார்.

அதுவரையிலும் பொங்கிக் கொண்டிருந்த ஆனந்தம் வள்ளியின் இதயத்திலிருந்து குமுறி எழுந்தது. சங்கமனின் கைகளை எடுத்துத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

அடிகள் குடிசையினுள் நுழையும்போது சொக்கநாதர் நல்ல நித்திரையில் இருந்தார். அடிகள் அருகில் சென்று அமரவும் அவரும் தானாகவே விழித்துக் கொண்டார். அவருடைய கண்கள் இன்னும் கட்டப்பட்டே இருந்தன. அடிகள் அவருடைய கைகளைப் பற்றி "சிற்பியாரே! உடல் நலம் எப்படியிருக்கிறது?" கண்களிலிருந்த நோவு எப்படியிருக்கிறது? என்று ஆதரவாகக் கேட்டார். அடிகளின் வரவை அறிந்ததும் கரம் கூப்பி வணங்கிக் கொண்டே "அடிகளே, வரவேண்டும். தேவியின் அருளால் உடல் நலமடைந்து வருகிறது. இன்னும் ஓரிரு தினங்களில் பூர்ண சுகம் எய்திடுவேன். கண்களில்தான் என்றும் தீராத நோய் கண்டுளது. தேவியின் விருப்பம் எப்படியுளதோ அவ்விதமே ஆகும் என்றிருக்கிறேன்" என்று கூறிவிட்டு நீண்டதொரு பெருமூச்சு விட்டார். அப்பொழுது உள்ளே வந்த சங்கமன் நேரே சென்று சொக்கநாதரின் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

அதே சமயம் அடிகள் "சிற்பியாரே! தங்களைப் பார்த்துச் செல்லச் சங்கமன் வந்திருக்கிறான். அவனை ஆசீர்வதியுங்கள்" என்று கூறினார். சங்கமனின் பெயரைக் கேட்டதும் சொக்கநாதரின் முகத்தில் வேதனையின் குறி படர்ந்தது. இதை உணர்ந்த அடிகள் "சிற்பியாரே, சங்கமன் போற்றப்படத்தக்கவன். உங்கள் இருவரின் பொருட்டு மாபெரும் தியாகம் செய்ய முற்பட்டான். தேவியின் அருளால் அடியேன் செல்லாதிருந்தால் கலைப் போட்டிக்கென அவன் செதுக்கியிருந்த வீராங்கனையின் சிலையைத் துகள் துகளாக உடைத்தெறிந்திருப்பான்" என்று கூறவும் வள்ளியின் கண்களில் நீர் துளித்தது. சொக்கநாதர் பேசாது மௌனமாக இருந்தார்.

சொக்கநாதர் அவனது கைகளை இதயத்துடன் அணைத்துக் கொண்டு "சங்கமா, நான் உண்மையில் ஞான சூன்யனாக இருந்து விட்டேன். பொறாமை என் கண்களை மறைத்து விட்டது. எனது கலையும் ஜீவனற்ற கலையாகிவிட்டது. கைத் திறமையால் வென்றுவிடலாம் என்று பார்த்தேன். சுயநலம் என் நாட்டின் கௌரவத்தையும் எனது பதவியையும் காப்பாற்ற என்னைத் தூண்டியது. அதனால்தான் இன்று கண் இழந்தவனாக இருக்கிறேன். என்னை மன்னித்துவிடு" என்று தழு தழுத்த குரலில் கேட்டுக் கொண்டார்.

"எல்லோரையும் தேவி மன்னித்து விட்டாள். அவள் அருளால் எல்லாம் நன்மையாகவே முடியும்" என்று கூறிவிட்டு அடிகள் காலையில் வந்து சந்திப்பதாகக் கூறி எழுந்தார். சங்கமனும் அவருடன் போக எழுந்தான். சொக்கநாதர் அவன் கைகளைப் பற்றி இரவு தங்கி இருந்து விட்டுப் போகும்படி கேட்டுக் கொண்டார்.

"வள்ளி, நமது விருந்தாளியாக இருக்கும் இவர்தான் இலங்கையிலிருந்து வந்திருக்கும் சிற்ப அரசர். அவருடைய கலைகளைக் கவனித்து உபசரித்து அனுப்புவது நமது கடமை. அவரை அழைத்துச் சென்று சிற்பக்கூடத்திலுள்ள சிற்பங்களைக் காண்பித்து வா" என்று அனுப்பினார். கலைஞர்கள் இருவருடைய உள்ளங்களும் ஒன்றுபடும் என்பது அவரது விருப்பம்.

சிற்பக்கூடத்திலுள்ள ஒவ்வொரு சிற்பங்களாகக் காண்பித்துக் கொண்டு வந்தாள். அவளுடைய கைகளைப் பற்றி நடந்த சங்கமன் தன்னை மறந்து கனவு உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். ஒரு பக்கத்துச் சுவரில் செதுக்கப் பட்டிருந்த சிற்பம் அவனை மெய்சிலிர்க்கச் செய்தது. கந்தர்வன் ஒருவனுடைய மார்பில் சாய்ந்த வண்ணம் தேவ கன்னிகை ஒருத்தி யாழ் வாசித்துக் கொண்டிருக்கிறாள். கீத வெள்ளத்தைப் பருகி மெய்மறந்து நிற்கின்றான் அக் கந்தர்வன். அவனுடைய விழிகளில் மோகன வெறி தாண்டவமாடுகிறது. அதைப் பார்த்துக் கொண்டிருந்த சங்கமன் பக்கத்தில் நின்ற வள்ளியைப் பார்த்தான். அவளுடைய முகம் நாணத்தால் சிவந்திருந்தது. "வள்ளி" என்றான்; தலை நிமிர்ந்து பார்த்தாள். "இதைச் செதுக்கியது யார்? நீயா உனது தந்தையா?" என்று கேட்டான். "உங்கள் அடிமைதான்" என்ற பதிலைக் கேட்டு அவனது மனம் எல்லையற்ற ஆனந்த மடைந்தது.

நிலா வெளிச்சத்தில் அன்று வள்ளி அவனுக்கு இட்ட உணவு தேவாமிர்தமாக இருந்தது. சாப்பிடும் பொழுது அவன் "அப்பாவிடம் உத்தரவு பெறவேண்டும்" என்று கேட்டான். "நீங்கள்தான் கேட்க வேண்டும். என்னால் அது முடியாது" என்றாள்.

ஆதவன் உதித்தான். நகர் எங்கும் சங்கங்களின் சப்தமும் பேரிகைகளின் முழக்கமும் மக்களை நித்திரையினின்றும் விழித்தெழச் செய்தன. அன்று தான் தேவியின் சிலையைப் பிரதிஷ்டை செய்வதற்கெனக் குறிப்பிட்ட தினம். மக்கள் புது உடை உடுத்திப் பத்தி பத்தியாகக் குமரிக் குன்றினை நோக்கி நடந்தனர். கன்னியின் கோவில் குன்றின் உச்சியில் வானளாவி நின்றது. கோவிலினுள் அமைந்திருந்த கலா மண்டபத்தில் சிற்பங்கள் எல்லாம் வைக்கப் பட்டிருந்தன. மன்னனது வருகைக்கும் அடிகளின் வருகைக்காகவும் மக்கள் காத்திருந்தனர். குறித்த நேரத்தில் மன்னன் அடிகளுடன் கோவிலை வந்தடைந்தான்.

செங்குட்டுவன் ஒவ்வொரு சிற்பங்களையும் பார்வையிட்டு வந்தான். இச்சிற்பங்கள் எல்லாவற்றிற்கும் கடைசியாக வைக்கப் பட்ட இரண்டு சிற்பங்கள் சேரனின் கவனத்தை இழுத்தன. இரண்டும் கலையின் பரிபூரணத்துவம் பெற்ற ஜீவன் நிறைந்த சிற்பங்களாக இருந்தன. சௌந்தர்யத்தில் ஒன்றை ஒன்று விஞ்சி நின்றது. அதில் எது சிறந்தது என்று மன்னனால் முடிவு



திருச்சி மாணவர் மகாநாட்டுச் சித்திரக் காட்சியில் வைக்கப்பட்டிருந்த இப் படம் "பள்ளிக்கூடங்களில் பாரதி பாடல்களைப் படிக்கக் கூடாது" என்ற சர்க்கார் உத்தரவைச் சித்தரிக்கிறது.

கட்ட முடியவில்லை. அவனது கண்களுக்கு ஒரே ஒரு வேறுபாடுதான் தென்பட்டது. ஒன்று மதுரையம்பதி வீராங்கனை கற்பரசி கண்ணகியை நினைவுறுத்தியது. மற்றது சௌந்தர்ய தேவியாக நின்று உலகினைத் தன் அருட்கண்களால் பரிபாலிக்கும் அன்னை கண்ணகி தேவியாகக் காட்சி தந்தது. மன்னனின் உள்ளத்தில் வீராங்கனையாகக் காட்சி தந்த முதற் சிலைதான் முடிவாக இடம்பெற்றது. வீரன் அதில்தான் தனது குல தெய்வத்தைக் கண்டான். இளங்கோவடிகளை அழைத்து அவரது முடிவைக் கேட்டான். அடிகளின் கவியுள்ளம் அருட் தெய்வமாக நின்ற சௌந்தர்ய தேவியைத் தான் தேர்ந்தெடுத்தது. சேரமாதேவியும் சௌந்தர்ய தேவியைத் தான் தேர்ந்தெடுத்தாள்.

அரசன் தனது முடிவை வெளியிட்டான். "வீராங்கனையாக, தேவியைச் செதுக்கிய சிற்பிக்கு அரசாங்க சிற்பி என்ற பட்டமும் சௌந்தர்ய தேவியாகச் சமைத்த சிற்பிக்கு சிலம்புச் செல்வமும் பரிசாக வழங்கப்படும். சௌந்தர்ய தேவி இந் நாட்டின் கோவிலில் வைத்துப் பூஜிக்கப்படுவாள். வீராங்கனை இந்நாட்டின் பரிசாகக் கயவாகு மன்னருக்கு அனுப்பப்படும். இலங்கைத் தீவில் கயவாகு மன்னருக்கு எடுக்கப்படும் கண்ணகி தேவியின் கோவிலில் வீராங்கனை பிரதிஷ்டை செய்யப்படுவாள்" என்று அறிவித்தான். மக்கள் எல்லோருக்கும் இது பிரகடனம் செய்யப்பட்டது. இவ்விரண்டு சிற்பங்களையும் செதுக்கிய சங்கமனையும் வள்ளியையும் மக்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார் இளங்கோ அடிகள்.

அன்றிரவு வள்ளி தன் தந்தையின் அருகில் இருந்து கொண்டு கோவிலில் நடந்த ஒவ்வொன்றையும் விளக்கமாகக் கூறிக் கொண்டிருந்தாள். அப்பொழுது அங்கு வந்த அடிகள் சங்கமனின் கைகளைப்பற்றிச் சொக்கநாதரின் கைகளில் வைத்து "சிற்பியாரே, எனது விருப்பமும் பூர்த்தியாக்கப்பட வேண்டும். அரசர் சங்கமனை இந்நாட்டிலேயே சிறை செய்ய வேண்டித்தான் பதவியைத் தந்துளார். தேவியின் முன்னர் அவர்களுடைய வாழ்க்கை ஆரம்பிக்கப் படட்டும்" என்று கூறினார்.

பூர்ண சுகம் பெற்று எழுந்த சொக்கநாதர் தனது மருகனின் கைகளைப் பிடித்துக் கொண்டு தேவியின் கோவிலுக்குச் சென்றார். பிரகாசம் குன்றிய அவருடைய கண்களில் ஆனந்தம் தாண்டவமாடியது. தன் முன் கரம் கூப்பி நின்ற சொக்கநாதரின் ஞானக் கண்களுக்கு ஜோதிப் பிழம்பாய்க் காட்சி தந்தாள் கற்புத் தெய்வம்.












# காட்டில் சண்டை

ராஜி

காட்டிலிருந்த வெள்ளைப் பூனைகளுக்கும் கறுப்புப் பூனைகளுக்கும் யார் காட்டை ஆளுவது என்பதைப் பற்றி அடிக்கடி சச்சரவுகள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. சச்சரவுகள் சண்டையாக மாறினதால் 'விட்டோமா, பார்' என்று மார் தட்டின கறுப்புப் பூனைகள். 'அதையும்தான் பார்ப்போம்' என்றன வெள்ளைப் பூனைகள்.

மறுநாள் காலை ஏராளமான கறுப்புப் பூனைகள் அணிவகுத்து நின்றன. ஒவ்வொரு பூனையின் கையிலும் ஒரு துப்பாக்கி. அவைகளுக்குத் தலைமை வகிக்கும் பெரிய கறுப்புப் பூனை "கிளம்புங்கள். கிழக்கு நோக்கி நேராகச் செல்லுங்கள். 'லெப்ட், ரைட், லெப்ட்'' என்று சொல்ல, கறுப்புப் பூனைகள் வரிசையாகச் செல்ல ஆரம்பித்தன. அதே மாதிரியாகவே காட்டில் மற்றொரு பக்கத்தில் ஏராளமான வெள்ளைப் பூனைகள் கையில் துப்பாக்கியை வைத்துக் கொண்டு அவைகளுக்குத் தலைமை வகிக்கும் பெரிய வெள்ளைப் பூனையின் பின்னால் அணிவகுத்து மேற்கு நோக்கி வந்துகொண்டிருந்தன. காட்டிலுள்ள மற்ற மிருகங்களெல்லாம் இந்தச் சண்டையின் விளைவு என்ன ஆகுமோ என்று பயந்து கொண்டிருந்தன.

சற்று தூரத்தில் கறுப்புப் பூனைகளின் கூட்டம் முன்னேற ஆரம்பித்தது. பெரிய கறுப்புப் பூனை சொற்படியே அவைகள் நடந்து கொண்டு வந்தன. "நேராக" "இடது பக்கம்" "வலது பக்கம்" என்று அடிக்கடி கறுப்புப் பூனைகளுக்குப் பெரிய பூனை எச்சரிக்கை செய்து கொண்டு வந்தது. கறுப்புப் பூனைகள், தலைவன் சொற்படியே நடந்து வந்தன. அப்படி நடந்து வரும் பொழுது ஒரு பெரிய பள்ளம் குறுக்கிட்டது. பெரிய பூனை 'சற்று இடது பக்கம் நகருங்கள்!' என்று எச்சரிக்கை செய்ய மறந்துவிட்டது. கறுப்புப் பூனைகள் அப்பொழுது என்ன செய்தன தெரியுமா? தலைவனுடைய உத்தரவு இல்லாமல் நகரக்கூடாது என்று நேராகப் பள்ளத்தில் ஒவ்வொன்றாக விழுந்து விழுந்து வெளியே வந்து நடக்க ஆரம்பித்தன.

கறுப்புப் பூனைகள் ஒற்றுமையாக நடந்து வெகு தூரம் முன்னேற ஆரம்பித்தன. இந்தச் சண்டையில் இரு கட்சிக்காரர்களும் தங்கள் இனத்தாருக்கு எச்சரிக்கை செய்வதற்காகக் காடு முழுவதும் ஒலிபெருக்கிக் கருவிகள் வைத்திருந்தார்கள். அச்சமயத்தில் அவ்வழியாகக் கறுப்புப் பூனைகள் வந்தன. "எச்சரிக்கை! நீங்கள் முன்னேறுகிறீர்கள் என்று நினைக்க வேண்டாம். நாங்கள் உங்களைவிட முன்னேறிக் கொண்டு வருகிறோம். பத்து நிமிஷத்தில் உங்களை வளைத்துக் கொண்டு விடுவோம். அப்பொழுது உங்கள் உயிருக்கே ஆபத்து வந்து விடும். உடனே திரும்புங்கள்!" என்று பலமுறை ஒலிபெருக்கிக் கருவியில் சப்தம் வந்துகொண்டிருந்தது.

இதைக் கேட்ட கறுப்புப் பூனைகள் ஒன்றுக்கொன்று பார்த்துக் கொண்

டன. அவைகளுக்குப் பயம் ஏற்பட்டது. கிழக்குப் பக்கம் திரும்பியிருந்த பெரிய பூனையின் உடல் மேற்குப் பக்கம் திரும்பிற்று. பிறகு நாலுகால் பாய்ச்சலில் பெரிய பூனை திரும்பி ஓட, மற்ற கறுப்புப் பூனைகள் யாவும் பெரிய பூனையைப் பின்பற்றின. எல்லாக் கறுப்புப் பூனைகளும் தலைதெறிக்க ஓடிக் கறுப்புப் பூனை ராஜாவிடம் சென்றன. தன்னுடைய கறுப்புப் பூனைகள் திரும்பி ஓடி வருவதைப் பார்த்த ராஜா, "ஏன் இப்படித் திரும்பி ஓடி வருகிறீர்கள்? நீங்கள் முன்னேறி வருவதைப் பார்த்துச் சந்தோஷங் கொண்டு இப்பொழுது தானே வெள்ளைப் பூனைகளின் கட்சிக்கு ஒலிபெருக்கியின் மூலம் எச்சரிக்கை செய்தேன்" என்று சொல்ல, கறுப்புப் பூனைகள் யாவும் "அடாடா, அந்த எச்சரிக்கை எதிர்க் கட்சியிலிருந்து எங்களுக்கு வந்தது என்று நினைத்து பயந்து ஓடிவந்து விட்டோம்" என்று மெல்லிய குரலில் தலை குனிந்து கொண்டே கூறின. அப்பொழுது அவைகளின் முகத்தில் அசடு வழிந்தது.

கறுப்புப் பூனை ராஜாவுக்கு பயம் உண்டாயிற்று. சற்று நேரத்தில், தங்கள் சேனை பின் வாங்கியதைக் கேட்ட வெள்ளைப் பூனைகள் தன்னை நோக்கிப் படையெடுத்து வரும் என்று பயம் அடைந்தது. ராஜா நினைத்தது போலவே கொஞ்ச நேரத்திற்கெல்லாம் வெள்ளைப் பூனைகளின் கூட்டம் கறுப்புப் பூனைகள் இருக்கும் இடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தது. அதைப் பார்த்த ராஜாவும் மற்றப் பூனைகளும் பயம் அடைந்து அக்காட்டை விட்டு வேறு காட்டுக்கு ஓடி விடலாமா என்று யோசித்துக் கொண்டிருந்தன.

அப்பொழுது அந்த வெள்ளைப் பூனைகள் ஒரு சமாதானக் கொடியைத் தூக்கிக் கொண்டு வரும் பொழுதுதான் கறுப்புப் பூனைகளுக்கும் அவற்றின் ராஜாவுக்கும் ஆச்சரியமும் தைரியமும் உண்டாயின. அவ் வெள்ளைப் பூனைகளின் கூட்டம், தங்கள் ராஜா கொடுத்த கடிதத்தைக் கறுப்புப் பூனை ராஜாவிடம் கொடுத்தது. அதில் பின்வருமாறு எழுதியிருந்தது :

"கறுப்புப் பூனை ராஜாவே, சில நாட்களாக நாம் சண்டைக்காகத் துப்பாக்கி சுடப் பழகி வந்ததனால் ஏற்பட்ட சப்தத்தில் நம் சேனைக்கு வேண்டிய முக்கிய ஆகாரமான எலிகள் வேறு காட்டுக்கு ஓடிவிட்டன. அதனால் எலிகளையே சில நாட்கள் பார்க்காதிருந்த என் சேனைகள் இன்று உமது சேனைகளை நோக்கி வந்துகொண்டிருக்கும் போது ஓர் எலி குறுக்கிடவே, அதைத் துரத்திக் கொண்டு நாலா பக்கமும் ஓடிவிட்டன. ஆதலால் நான் சண்டையை நிறுத்தி விட்டு உம்முடன் சமாதானமாக இருக்கவே விரும்புகிறேன். வீண் சண்டை வேண்டாம். பதில் தெரியப் படுத்தவும்" என்று வெள்ளைப் பூனை ராஜா எழுதியிருந்தது.

இக் கடிதத்தைப் பார்த்த கறுப்புப் பூனை ராஜாவுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. "நானும் சமாதானம் செய்து கொள்ளுகிறேன்" என்று வெள்ளைப் பூனை ராஜாவுக்குத் தெரியப் படுத்திற்று. அப்பொழுது ஆனந்தத்தினால் அங்கு கூடியிருந்த கறுப்புப் பூனைகளும், வெள்ளைப் பூனைகளும் "சமாதானம். சமாதானம்" என்று கை கொட்டிக்கொண்டு கத்தின.



# வசீகரிக்கும் தம்பதிகள்

வழியில் போகும் எல்லோருமே உங்கள் கவனத்தைக் கவருவதில்லை. நன்றாக ஆடை அணிந்திருப்பவர்களே உங்கள் கவனத்தைக் கவருகின்றனர்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேற்றம் அடைய வேண்டுமானால், உங்கள் மேல் சிறிது சிரத்தை ஏற்பட வேண்டியது அவசியம். முதன்முதல் ஏற்படும் எண்ணங்களே - கடைசி வரை நீடித்து நிற்கக் கூடியவை - அது நீங்கள் தோற்றமளிப்பதைப் பொறுத்திருக்கிறது.

வசீகரமாகவும் கவர்ச்சியாகவும் தோற்றமளிக்க - உங்கள் துணி மணிகளை கீழ்கண்ட இடத்தில் வாங்குங்கள்.

பாபுலர்
சுதேசி ஸ்டோர்ஸ்
"பாபுலர் ஹவுஸ்"
பைக்ராப்ட்ஸ் ரோடு,
திருவல்லிக்கேணி :: சென்னை.

Tele | Phone: 86220
| Grams: ESPEEOR, Madras.

P.N.2

## THE POPULAR SWADESHI STORES

POPULAR HOUSF

PYCROFTS ROAC, TRIPLICANE, MADRAS

# பாரதியார் ஞாபகார்த்த நிதி

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ என். எம். ஆர். வெங்கட கிருஷ்ணய்யர், ராயல் டாக்கீஸ், மதுரை | 1001 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ஸ்ரீநிவாஸன், ஆசிரியர், "ஹிந்து" சென்னை | 500 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். வி. ஸ்வாமி, நிர்வாக ஆசிரியர், ப்ரீ பிரஸ் & பாரத தேவி, சென்னை | 500 | 0 | 0 |
| சவுத் இந்தியன் ரேடியோ ஹவுஸ், தூத்துக்குடி | 101 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். முத்துசுவாமி செட்டி, வயிரவன் செட்டி & கோ., மதுரை | 101 | 0 | 0 |
| மெஸர்ஸ் ஜுபிடர் பிக்சர்ஸ், கீழ்ப்பாக்கம், சென்னை | 100 | 0 | 0 |
| ஸ்ரீ எம். வி. என். சுந்தரவேல் நாடார், தூத்துக்குடி | 100 | 0 | 0 |
| ஸ்ரீ வி. ஆர். ஸ்ரீநிவாஸன், ஆசிரியர், சுதேசமித்திரன், சென்னை | 100 | 0 | 0 |
| திருவாங்கூர் ஆஸ்தான வித்வான் ஸ்ரீ பழனி சுப்ரமணிய பிள்ளை, திருச்சி | 51 | 0 | 0 |
| மிஸ்டர் & மிஸஸ் அஸாவுதீன், காயல்பட்டணம் | 51 | 0 | 0 |
| ஸ்ரீ ஜெ.எஸ்.பி. ரோச் விக்டோரியா, எம். எல். ஏ., முனிசிபல் சேர்மன், தூத்துக்குடி | 51 | 0 | 0 |
| ஸ்ரீ வி.வி. தனுஷ்கோடி நாடார், தூத்துக்குடி | 51 | 0 | 0 |
| சிஜு. லாஜு. தூத்துக்குடி | 51 | 0 | 0 |
| ஸ்ரீ என்.கே.ஆர். பெரியண்ண நாடார், தூத்துக்குடி | 51 | 0 | 0 |
| ஸ்ரீ ஜெய். எஸ். அன்டு சி. மச்சோடா, தூத்துக்குடி | 51 | 0 | 0 |
| ஸ்ரீ என்.பி.ஏ.எஸ். பெரியண்ண நாடார், தூத்துக்குடி | 51 | 0 | 0 |
| ஸ்ரீ. கே. எம். வி. சுப்பராய செட்டியார் & மாரி செட்டியார், வேம்படிதாளம் | 51 | 0 | 0 |
| ஸ்ரீ கே. என். சந்திரய்யா & கே. சி. சாரங்கபாணி, செவ்வாய்ப் பேட்டை | 51 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ.சி.எஸ். முத்தையா ரெட்டியார், தூத்துக்குடி | 50 | 0 | 0 |
| கானகலாதர ஸ்ரீ மதுரை மணி அய்யர், மாயவரம் | 50 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ஏ. சித்தா செட்டியார், குகை, சேலம் | 50 | 0 | 0 |
| ஏ.பழனியப்பமுதலியார் & சன்ஸ் நல்லாக்கவுண்டன்பாளையம் | 50 | 0 | 0 |
| ஸ்ரீ எம். சுப்பிரமணியன், செங்கலாடி | 50 | 0 | 0 |
| ஸ்ரீ மு.அ. ராமசாமி செட்டியார், ஜவுளி வியாபாரம், எட்டயபுரம் | 41 | 0 | 0 |
| வி. எஸ். குலாட்டி, (வி. சி. ஓ.), தூத்துக்குடி | 31 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். பெருமாள் செட்டியார் & கோ., வேம்படிதாளம் | 31 | 0 | 0 |
| ஸ்ரீ வி. ஆர். வெங்கட்ராம செட்டியார், குகை, சேலம் | 31 | 0 | 0 |
| காமதேனு டெக்ஸ்டைல்ஸ், ஈரோடு | 31 | 0 | 0 |
| ஏ. என். எஸ். எம். சோமசுந்தரம் செட்டியார் & கோ., மதுரை | 30 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. ஆர். முத்துசாமி, செவ்வாய்ப்பேட்டை | 25 | 12 | 0 |
| ஸ்ரீ வி. ஆர். வி. ராஜகோபால் செட்டியார், எனம்பள்ளி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ டி. சவுண்டப்ப செட்டியார், குகை, சேலம் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. வி. குருசாமி நாயுடு, இராசிபுரம் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். வி. ரங்கசாமி & பிரதர்ஸ், குகை, சேலம் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். வி. சுந்திர கிருஷ்ண செட்டி & பிரதர்ஸ், குகை | 25 | 0 | 0 |
| ஸ்ரீ கே. விஸ்வநாத செட்டியார், குகை, சேலம் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ வி. ஆர். சித்தா செட்டியார், குகை, சேலம் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ பி. என். வி. கணபதி செட்டியார், குகை, சேலம் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ வி. சொக்கலிங்கம் செட்டியார், குகை, சேலம் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ வைத்தியநாத ஐயர், மதுரை | 25 | 0 | 0 |
| ஸ்ரீ வி. மாரியப்ப செட்டியார், மதுரை | 25 | 0 | 0 |
| ஸ்ரீ சி. கல்யாண சுந்தரம் செட்டியார், சிந்தாதிரிப் பேட்டை | 25 | 0 | 0 |
| ஸ்ரீ பி. எஸ். ராமையா, கதாசிரியர், கீழ்ப்பாக்கம், சென்னை | 25 | 0 | 0 |
| ஏ. ஆர். ஏ. எஸ். ஏ. பாங்கர்ஸ், தூத்துக்குடி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ எம். சி. வீரபாகுப் பிள்ளை, தூத்துக்குடி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ கே. எம். ஏ. கே. ராஜரத்ன நாடார், தூத்துக்குடி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ டி. ஜி. ஜெய். நியூட்டன், தூத்துக்குடி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ டி. ஷண்முக மூப்பனார், தூத்துக்குடி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ எம். விஇ. விஇ. துரைராஜ் நாடார், தூத்துக்குடி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ தே. அ. மா. அருணாசல நாடார், தூத்துக்குடி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. பி. சி. வீரபாகு, பி. ஏ., தூத்துக்குடி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ டாக்டர் பி. ஆர். ஆச்சார்யா, தூத்துக்குடி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ ஓ.பி.என். அருணாசல நாடார், தூத்துக்குடி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ வி. டி. வி. தர்மப் பெருமாள் பிள்ளை, தூத்துகுடி | 25 | 0 | 0 |
| மெஸர்ஸ் கே. ஆர். அன்டு கம்பெனி, சென்னை | 25 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ராமசாமிதாஸ், கோவில்பட்டி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ எல்லிஸ் ஆர்.டங்கன், பிலிம் டைரக்டர், சென்னை | 25 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். டி. சோமசுந்தரம் பிள்ளை, தூத்துக்குடி | 21 | 0 | 0 |
| ஸ்ரீ கே. எஸ். எஸ். சௌந்தர பாண்டிய நாடார், தூத்துக்குடி | 21 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ்.எஸ்.எஸ். சங்கரலிங்க நாடார், தூத்துக்குடி | 21 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். முத்து விஜய நாடார், தூத்துக்குடி | 21 | 0 | 0 |
| ஸ்ரீ டாக்டர் ஏ. சி. கோபாலன், தூத்துக்குடி | 21 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர்.எம். சீதாராம நாயுடு, தூத்துக்குடி | 21 | 0 | 0 |
| ஜனாப் கே. அப்துல் மஜீத், நடுவிற்பட்டி, எட்டயபுரம் | 21 | 0 | 0 |
| ஸ்ரீ சொ. மா. பா. கிருஷ்ணாஞ் செட்டியார், எட்டயபுரம் | 21 | 0 | 0 |
| முருகன் அன் கோ, ஜவுளி வியாபாரம், ஈரோடு | 21 | 0 | 0 |

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ எஸ். எம். எஸ். எஸ். ராஜகோபாலன் & பிரதர்ஸ், மதுரை | 21 | 0 | 0 |
| ஸ்ரீ சு. க. நா. சொக்கலிங்கஞ் செட்டியார், மதுரை | 21 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ்கே. என்ஆர். கேஎன்ஆர். சோமசுந்தரஞ் செட்டியார், மதுரை | 21 | 0 | 0 |
| ஸ்ரீ வி. எம். பங்காரு செட்டியார், குகை, சேலம் | 20 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ஆர். வி. சென்னி செட்டியார், குகை, சேலம் | 20 | 0 | 0 |
| ஸ்ரீ பி. ஏ. என். காவேரி செட்டியார், குகை, சேலம் | 20 | 0 | 0 |
| ஸ்ரீ கே. எம். கிருஷ்ணமூர்த்தி செட்டியார் & பிரதர்ஸ், சேலம் | 20 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. கோவிந்தா முதலியார் & சன்ஸ் சித்தோடு | 20 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ஏ. சுப்ரமணிய செட்டியார், கொண்டலாம்பட்டி | 20 | 0 | 0 |
| ஸ்ரீ கே. எம். தம்மண்ண செட்டியார், குகை, சேலம் | 20 | 0 | 0 |
| ஸ்ரீ டி. ஏ. ஒபுளி செட்டியார், குகை, சேலம் | 20 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். நாகராஜராவ், புகைப்படக் கலைஞர், மயிலாப்பூர் | 20 | 0 | 0 |
| ஸ்ரீ கே. பழனியப்ப செட்டியார், திருப்பூர் | 16 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். வி. முத்துப்படையாட்சி, திருச்செங்கோடு | 16 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். வரதராஜுலு செட்டியார், குகை, சேலம் | 16 | 0 | 0 |
| ஸ்ரீ வி. கு. கு. & சன்ஸ், மதுரை | 16 | 0 | 0 |
| ஸ்ரீ கே. எம். கே. சின்னமுத்து சுவாமி, மதுரை | 16 | 0 | 0 |
| ஸ்ரீ வி. எஸ். ஷண்முகம் பிள்ளை, ஆத்துக்குடி | 15 | 0 | 0 |
| ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதியார், அரவிந்தாசிரமம், புதுச்சேரி | 15 | 0 | 0 |
| ஸ்ரீ கே. பி. ஆறுமுகம் செட்டியார், குகை, சேலம் | 15 | 0 | 0 |
| ஸ்ரீ கே. பி. வேலா செட்டியார், இராசிபுரம் | 15 | 0 | 0 |
| ஸ்ரீ வி. ஆர். பி. மாணிக்கம் செட்டியார், குகை | 15 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். எஸ். பழனி செட்டியார், ரிடையர்ட் சர்க்கிள் இன்ஸ்பெக்டர், இராசிபுரம் | 15 | 0 | 0 |
| ஸ்ரீ மா. வே. ராஜாராமன்ராவ், ஜார்ஜ் டவுன், சென்னை | 12 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். எஸ். ஏ. சுப்பய்யா நாடார் சன், மணிகை, மதுரை | 11 | 0 | 0 |

★

| | | | |
|---|---|---|---|
| புதுடெல்லி சங்கீத சபையின் கதம்ப நிகழ்ச்சி மூலம் வரவு | 450 | 0 | 0 |
| ஸ்ரீ அண்ணாமலை பல்கலைக் கழக மாணவர்களும் ஆசிரியர்களும் அண்ணாமலை நகர் (பேராசிரியர் தெ. பொ. மீனாக்ஷிசுந்தரம் மூலம்) | 220 | 0 | 0 |
| தென் "மதராஸ் எலெக்ட்ரிஸிடி ஸ்டாப் அஸோஸியேஷன் அங்கத்தினர்கள், தென்னூர், திருச்சி | 72 | 4 | 0 |
| சாத்தூர் ஹிந்து நாடார் எட்வர்ட் ஹைஸ்கூல் மாணவர்களும், உபாத்தியாயர்களும் (எஸ். என். ஆதிநாதன் மூலம்) | 51 | 7 | 0 |
| மாயவரம் அன்பர்கள் (ஸ்ரீ ஏ.வி. வெங்கடராமன், கல்வி ஏஜண்டு. மூலம்) | 50 | 0 | 0 |
| மாணவர்களும் ஆசிரியர்களும், ஒக்கூர் வெள்ளையன் செட்டியார் ஹைஸ்கூல், மானாமதுரை (ஹெட்மாஸ்டர் ஸ்ரீ வி. விசுவநாதன் பி.ஏ. எல்.டி. மூலம்) | 45 | 0 | 0 |
| பாரதி தினக் கொண்டாட்டக் கமிட்டியார், புதுடெல்லி | 40 | 0 | 0 |
| புளியம்பட்டி, காதி வஸ்திராலய உண்டியல் வசூல் (நிர்வாகி ஸ்ரீ பி. எஸ். ரங்கசாமி மூலம்) | 32 | 0 | 6 |
| அம்பாலா, தென்னாட்டு பாரதி அன்பர்கள் (ஸ்ரீ கே. என். சாரி, மூலம்) | 26 | 0 | 0 |
| சேலம், உயர்தர பாடசாலை மாணவிகளும் கலாசாலை மாணவிகளும் (எஸ். கோமளம் மூலம்): | 20 | 0 | 0 |
| மதராசி லோயர் செகண்டரி ஸ்கூல் உபாத்தியாயர்கள் (ஸ்ரீ கே. வி. வெங்கடாசலம் மூலம்) | 15 | 0 | 0 |
| கோயமுத்தூர், ஜெனரல் எலெக்ட்ரிக் கம்பெனி (இந்தியா) லிமிடெட், உத்தியோகஸ்தர்கள் (ஸ்ரீ பி. ஜி. நாராயணன் மூலம்) | 15 | 0 | 0 |
| ஷண்முகானந்த விலாஸ் ஹோட்டல் புரொப்ரைட்டர் & தொழிலாளர்கள், திருப்பரங்குன்றம் | 15 | 0 | 0 |
| இட்டமொழி, ஏ. வி. ஜோஸப் ஹைஸ்கூல் மாணவர்களும், மற்ற உத்தியோகஸ்தர்களும் | 15 | 0 | 0 |
| மதுரைக் கல்லூரித் தமிழ் மாணவர்கள் (பண்டிதர் ஸ்ரீ டி. இராமானுஜம் மூலம்) | 12 | 12 | 0 |
| ஸ்ரீ ஆஞ்சநேய பால பக்த சபா, தீர்த்தநகர், ஆதிநாராயணபுரம் | 12 | 12 | 0 |
| சென்னை, ஸிம்ஸன் கம்பெனி, ஸ்ரீ கே. ராமமூர்த்தி மூலம் | 12 | 0 | 0 |
| திருப்பரங்குன்றம் அன்பர்கள் (ஸ்ரீ பி. கே. மணி அய்யர், ஷண்முகானந்த விலாஸ் மூலம்) | 11 | 0 | 0 |

★

ரூ. 11—0—0 : ஸ்ரீமான்கள் கே. ராமலிங்கம் செட்டியார், மதுரை ; என். ஆர். சுவாமி & கோ., மதுரை ; ரா. ம. அப்பாவு செட்டியார் & சன்ஸ். மதுரை ; வெ. ஏ. பா. சி. ந. பாண்டியஞ் செட்டியார் & கோ. மதுரை ; டி. என். சி. நாகலிங்கம் பிள்ளை, மதுரை ; பி. கே. டி. ஆர். சுவாமி & கோ., மதுரை ; எஸ். எஸ். அருணாசலம் செட்டியார், மதுரை ; ஜி. என். சி. & கோ., மதுரை ; எஸ். எம். என். மஹாதேவன் செட்டியார், மதுரை ; சு. அ. சு. சண்முகஞ் செட்டியார், எட்டயபுரம் ; இ. மு. ஆ. ராமசந்திரன் பிரதர்ஸ், எட்டயபுரம் ; பா. நாராயண பிள்ளை, எட்டயபுரம். ரூ. 10—4—0 : ஸ்ரீ ஆர். வி. நஞ்சப்ப செட்டியார் & பிரதர்ஸ், இராசிபுரம் ; ரூ. 10—0—0 : ஸ்ரீமான்கள் வி. வைரமுத்து, வவுனியா, இலங்கை ; பாரதி ஸ்போர்ட்ஸ் கிளப், திருப்பூர், (எஸ். சதாசிவம் மூலம்,) ; கே. எஸ். பி. பாலகிருஷ்ணன் அண்டு கோ, சென்னை ; எம். பாலசுந்தரம் செட்டியார், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை ; பி. வெங்கடராம ஐயர், பெரியமெட், சென்னை ; வி. ஷண்முகநாதன், மதுளசீமா, இலங்கை ; கே. அனந்தராம அய்யங்கார், விட்டல்புரம், பசலையங்கோட்டை ; ஸ்ரீமதி சுந்தரம்மாள், கீழ்ப்பாக்கம், சென்னை ; கே.எஸ்.எஸ். ராகவன், உதவி ஆசிரியர், "ப்ரீ ப்ரெஸ்," பம்பாய் ; எஸ்.கேஎம். எஸ்பி. மெய்யப்ப செட்டியார், காரைக்குடி ; ரா. ஸ்ரீ. ஸ்ரீகண்டன், எம். ஏ., கோபி ;

திருநெல்வேலி, கல்வி ஏஜண்டு, ஸ்ரீ எஸ். கோபாலகிருஷ்ணன் மூலம் :

ரூ. 25—0—0: ஸ்ரீ எ.ஆர். ஷண்முகம் பிள்ளை அண்டு எம். சோமசுந்தரம் பிள்ளை; ரூ. 5-0-0 ஸ்ரீ வி. கோமதிநாயகம் பிள்ளை, ஸ்ரீமதி வி. பத்மா; ரூ. 1—0—0 : ஸ்ரீ கே. வி. வீரபாண்டியன். ஆக ரூ. 36—0—0

புதுக்கோட்டை ஸ்டேட், ராங்கியம், ஸ்ரீ பெ. பெரி. குமரப்பன் மூலம் :

ரூ. 3—0—0 : ஸ்ரீ நா.வ.லெ. லெட்சுமணஞ் செட்டியார்; ரூ. 2—0—0 : ஸ்ரீமான்கள் பெ. பெரி. குமரப்பன், சா. முத்துபழனியப்பன்; ரூ. 1—0—0 ஸ்ரீமான்கள் மெ மு. மெ. சோமசுந்தரம் செட்டியார், முப. ராம. சாமிநாதன் செட்டியார், செ. பழ. மு காசிச் செட்டியார், சித. பழ. பழனியப்ப செட்டியார், முப. அ. பெரி. ஸ்ரீனிவாசன் செட்டியார், ராம. பழ. சின்னய்யா செட்டியார், பெரி பெரி சின்னத் தம்பி செட்டியார், லெ. சிதம்பரம், பெரி. அழ. பெரிய கருப்பன் செட்டியார், ராம. மாவழுகு ஆசாரி; ரூ 7—8—0 : ஒரு ரூபாய்க் குட்பட்ட நன்கொடைகள்.

ஆக. ரூ. 25—0—0

தேனி, ஸ்ரீ பி. ரத்தின நாடார் மூலம் :

ரூ. 6—0—3: ஸ்ரீ ரத்தின நாடார்; ரூ. 6-0-0: ஸ்ரீமான்கள் அ. சு. ப. அ. பழனி நாடார் அண்டு கோ., எஸ். எஸ். வையது அஹமது ராவுத்தர்; ரூ. 3—0—0: ஸ்ரீமான்கள் என். பி. கார்மேக நாடார், எம்.எ.எ. ரத்தின சாமி நாடார் அண்டு பிரதர்ஸ், என் எம். பால சுப்பிரமணிய நாடார் & பிரதர்ஸ், எஸ். வி. குன்னப்பக் கவுண்டர் அண்டு சன்ஸ், ஏ. என். எஸ். எஸ். சங்கரபாண்டிய நாடார் அண்டு சன்ஸ், என். தாமோதரன்; ரூ. 2—0—0 : ஸ்ரீமான்கள் ஏ. எம். நடராஜன், ச. ஏ. குருசாமி, வ. கே. என். கந்தசாமி, கே. ஏ. எஸ். காசிராஜ நாடார், ஆர். பி. பி. முத்தையா அண்டு கோ, எஸ்பி.கே.ஆர். லெவிங்க செட்டியார், எம். கோவிந்தசாமி செட்டியார், வி. கிருஷ்ணசாமி, ஆர்.எம்.எ. ஸ்ரீ செங்கராஜா, வி. வி. குருசாமி நாயகர்; ரூ. 1—4 0: ஸ்ரீ கே. ஏ. எஸ். தருமராஜன்; ரூ. 1—0—0 : ஸ்ரீமான்கள் ஏ. எஸ். அய்யணஞ் சேர்வை, வி. மாரியப்ப நாடார், வி. அருணாசலம், க. சாமித் தேவர், வி. கே. முத்து நாடார், வி எஸ். தனுஷ்கோடி, எம். நடராஜ நாடார், ஜி. ஞானமுத்து. எம்.எஸ்.வி. சுப்பிக்காளை நாடார், எம். எஸ். வி. செந்தியப்ப நாடார், ஏ. எம். ராஜப்ப நாடார், எஸ். கே. மாணிக்க நாடார், எம். தங்கம், எம். சங்கையா நாடார், என். ஏ. பெரியசாமி நாடார் பி. கே. ஞான தேசிகம் செட்டியார், எஸ். சஜராமணி செட்டியார், ஏ.எஸ் கே. அருணாசலம், டி. முத்துக் குமார் நாடார், எஸ். பெரியசாமி, ஆர். எம். எம். முத்தையா செட்டியார், கே. வீரபத்திரன் செட்டியார், எஸ். ஏ. என். என். பி. அழகிரிராஜா அண்டு பிரதர்ஸ், எஸ். ஏ. சாமிராஜா, எஸ். ராமலிங்கம், ஆர். எஸ். டேவிட்ராஜ், மகேசசாமி, வி. ஆர். ஏ. ஆன்வாச்சாமி நாயகர், என். கிருஷ்ணமராஜா, ஏ. கே. அழகர்ராஜா, எம். ஆறுமுகச் சாமி நாடார். பி.எஸ். கருப்பையா நாடார் அண்டு பிரதர்ஸ் எஸ். முத்கோடி. என். ஆர். தியாகராஜன், எம். ஆர். எஸ். அழகர்சாமி நாயுடு. சா. சொக்கத்தேவர். ஆர். எம். கே. ராமகிருஷ்ணன் செட்டியார். எஸ்.ஏ. சிதம்பர நாடார், கே. ஏ. டி. கோபால் நாடார், டி. பி. சோமு நாடார், ஆர். எஸ். ஏ. முத்துக் காமாட்சி செட்டியார், ஆர். நாராயணசாமி நாயகர், ஒ.ஆர்.எம். [illegible]டையப்ப செட்டியார், டி. காளி செட்டியார் அண்டு சன்ஸ், கே. வி. நாராயண ராவ், ஏ. கே. வஸ்ஏ. கே. அண்ணாமலை நாடார், ஜி. கணேசன், பி. பாண்டியன்; மு. பழநிச்சாமி நாடார், பெ. அருங்கலை நாடார், என்ஆர்கேஏ. ராமையா நாடார் அண்டு கோ, வி.எஸ்.ஏ. பால்ராஜ் நாடார், வி. பரசுராமன், கே. வி. செல்லையா தேவர்.

ஆக ரூ. 111—4—3

மேலூர், ஸ்ரீ மு (ராம) சுப்பையா அவர்கள் மூலம் :

ரூ. 5—0—0 : ஸ்ரீ எஸ்.என்.எஸ். பாங்கர்; ரூ. 3—0—0 : கண. நா. சுப. பாங்கர்; ரூ. 2—0—0 : ஸ்ரீமான்கள் நா. காசியா பிள்ளை உமையாம்பிகா கார்ப்பொரேஷன் பாங்கர், மா. சுப. குருநாதம் பிள்ளை; ரூ. 1—0—0 : ஸ்ரீமான்கள் ஜி. சாமிரத்தினம் பிள்ளை, மொ. க. கருப்பண்ண கோனார், டாக்டர் சுப்பையா பிள்ளை, ராம. சுப்பையா, குரு. அய்யாச்சாமி பிள்ளை, மா. வீரப்பன் சேர்வை.

ஆக ரூ. 20—0—0

உடுமலைப்பேட்டை, ஸ்ரீ என். வி. டி. ராமநாதன் மூலம் :

ரூ. 3—0 0: ஸ்ரீ குரு. ஜகந்நாதசாமி நாயுடு: ரூ. 2—0 0: ஸ்ரீமான்கள் கோ. வெங்கடுபதி நாயுடு, கே. அனுமந்த ராவ் : ரூ. 1—8—0 : ஸ்ரீ பி. ஆர். சுப்பிரமணியன் ; ரூ. 1—0—0 : ஸ்ரீமான்கள் ந. குருசாமி நாயுடு. சொ. நடராஜன், ஜகந்நாதன், க. அங்கப்ப செட்டியார், லெ. சுப்பராயலு. க. குமாரசாமிக் கவுண்டர், என். வி. டி. ராமநாதன் ; ரூ. 0—8—0 : ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை.

ஆக ரூ. 16—0—0

வடசென்னை, தேசிய இலவச வாசகசாலையின் சார்பில் காரியதரிசி ஸ்ரீ ஏ. ஏழுமலை மூலம் :

ரூ 5—0—0 : ஸ்ரீ நா. காளியப்ப முதலியார், துவ்வி வியாபாரம்; ரூ. 2—0—0: ஸ்ரீ நாராயணசாமி நாயகர், புஷ்பராக வியாபாரம்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் ஏ. ஆர். பார்த்தசாரதி நாயுடு, கோ. லோகநாதம், எம். ரங்கநாதம் பிள்ளை. ஏ. எம் அப்துல் ரஹீம், வி. ஆதிமூல நாயகர், டி. எஸ். ஸ்ரீனிவாஸன், எஸ். ராமச்சந்திரன், எச். ஜானகிராம ஐயர், வி.எஸ். நாகலிங்கம்; ரூ. 1—2—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை.

ஆக ரூ. 17—2—0

இலங்கை, மடேல், ஸ்ரீ வி. ஆர். செல்லையா மூலம் :

ரூ. 3—0—0 : ஸ்ரீமான்கள் வீர. செல்லையா, சுப. லெட்சுமணன் செட்டியார், பி. மு. வயி. பிச்சப்பா; ரூ. 2 -0—0 : ஸ்ரீமான்கள் சோம. வீரய்யா. மு. கிருஷ்ணசாமி ஆசாரி; ரூ. 1-0-0 ஸ்ரீமான்கள் மு. நித்தியானந்தம்; ரா. அண்ணாமலை, மு. ஷண்முகம், செ. சுப்பய்யா பிள்ளை, ஸ்ரீமதி சீதாலக்ஷ்மி, காமாட்சி ஆசாரி, அப. அருணாசல ஆசாரி, கண. செண்பகம், மு. சோமசுந்தரம் செட்டியார், மு. பி. முத்துக் கிருஷ்ணன், க. அருணாசல ஆசாரி, ரா. பெரியய்யா, மு. கருப்பையா பிள்ளை, அ. குமாரவேலாசாரி; வே. முருகய்யா ஆசாரி, வி. சுப்பையா ஆசாரி, மு. வி. பெருமாள் பிள்ளை, ஆரு. ஆறுமுகப் பண்டாரம்.

ஆக ரூ. 31—0—0

இலங்கை, கம்போலை, ஸ்ரீ எஸ். முத்து கிருஷ்ணன் மூலம் :

ரூ. 5—0—0 : ஸ்ரீ பழ. ச. விஸ்வநாதன் செட்டியார்; ரூ. 3—12—0 : ஸ்ரீ ராஜரத்தினம் ரூ. 2—8—0 : ஸ்ரீமான்கள் ஆர். கணபதி, கேஎஸ். வள்ளியப்பன், வி. முத்துக்கிருஷ்

ணன், டி. ராமய்யா, எஸ். ராமலிங்: ரூ. 1-8-0 ஸ்ரீ வே. சுப்பய்யா; ரூ. 1—4—0: ஸ்ரீ பெ. முத்தையா: ரூ. 1—0—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை. ஆக ரூ. 25—0—0

இலங்கை, தெம்போடா, ஸ்ரீ வி. ஆர். சேதுராமன் மூலம்:

ரூ. 3—0—0: ஸ்ரீ ஏ. எம். தம்பிநாயகம்; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் வி. ர. சேதுராமன், எம். சுப்பிரமணியம், எம். மகாதேவன், ஏ. வெள்ளையா ஆசாரி, டி. சிவானந்தம், டி. எம். ஏ. இஸ்மாயில், எஸ். கந்தய்யா, எம். சிவம் பிள்ளை, கே. பி. குணரெத்தினம், வி. மருதை, சி. கதிர்காமத்தம்பி, கே. வெள்ளைச்சாமி சேர்வை, கு. செல்லையயன், எஸ். வி. தங்கமணி, எஸ். சந்தானம்: எஸ். முத்தையா, சி. கன்னையா, பி. ஏ. எஸ். சோமசுந்திரம், பி. செல்லமுத்துக் கங்காணி, எஸ். அரியகுட்டியார்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் கே. ஆர். முத்து, டி. எம். ஏ. யாக்கூப், பி. ஆர். ராமலிங்கம் பிள்ளை, ஏ. எம். விருத்தாசலம், ஏ. அன்னாமலை, சு. சிதம்பரம், பி. திருமலை செட்டியார், ஏ. கே. முத்தையா முத்து ராசா, வி. கே. பாவா, ஏ. சுப்பய்ய ஆசாரி, எஸ். எஸ். தமீது, எஸ். எம். எம். முகம்மது சரீபு, பி. சுப்பன், எம். ஆறுமுகம், பேச்சிமுத்து, சிங்காரம், கே. ஆர். காளிமுத்து சேர்வை, வி. சிற்றம்பலம், பி. எம். ஏ. முகம்மது, பி. பாமு, கே. வி. கிருஷ்ணசாமி, என். சுப்பையா கே. எஸ் ரெத்தினம், எஸ். வி. கே. ரத்தினம் வில்வராயன் பெர்க்மான்ஸ், ஏ. தங்கய்யா, சி. சுப்பய்யா, என். தம்பு, கே. லிங்கசாமி, வேலுசாமி கங்காணி, வி. ஏ. ம. ரோஸ், ஏ. என். மருதை, கே. பி., எஸ் தங்கவேல், பி. லெட்சுமணன், பி. ஆர். வேலாயுதம், எம். ஏ. ராஸ், கே. சின்னையா, கே. பி., ஏ எம். மணிவேல் நாடார், ஜி. ஜே. பி. சமரசிங்ஹ, கே. எம். புகாரி, எம். எஸ். பி. சுப்பையா பிள்ளை, டி. கந்தசாமி, எம். சுப்பிரமணியம், எஸ். பி. ராஜாராம் நாயுடு. ஆக ரூ 87—0—0

இலங்கை, புசல்லாவா, ஸ்ரீ எம். பி. பெரியசாமி மூலம்:

ரூ. 5—0—0: ஸ்ரீமதி ராசாயி அம்மாள், ரூ. 3—0—0: ஸ்ரீ மு. பா. பெரியசாமி; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் சுப்பையா தேவன், வே. மங்கான் பிள்ளை; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் அ. கணபதி, ஆண்டி, பூந. சிதம்பரம், வி. அடைக்கப் பிள்ளை, வீ. ர. சின்னையா, பொன்னையா, ஜம்புலிங்கம் பிள்ளை, வீ ர. முத்தையா பிள்ளை, ந. கருப்பையா. ஜெய்னுதீன் ரூ. 0—8—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை. ஆக ரூ. 22—8—0

யாழ்ப்பாணம், தமிழ் இலக்கிய மறுமலர்ச்சி சங்கத் தலைவர் ஸ்ரீ எஸ். பி. சாமா மூலம்:

ரூ. 10—0—0: ஸ்ரீ சே. வி. நா. குப்புஸ்வாமி; ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் க. பஞ்சாக்ஷர சர்மா, என். துரையப்பா பத்தர் அண்டு சன்ஸ்; ரூ. 3—0—0: ஸ்ரீ வே. ஆழ்வார் பிள்ளை; ரூ. 2 8—0: ஸ்ரீ எஸ். கதிரேச பிள்ளை; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் அ. செ. முருகானந்தம், கனகசெந்திநாதன், அ. ந. கந்தசாமி, ப. வி. பொன்னுத்துரை, த. பொன்னுத்துரை, இ. நவரத்தினம், இ. இ. பூபாலசிங்கம், செ. நடராசா, எஸ். இ. இ. குகன், என். நாகலிங்கம், கே. ராஜதுரை, வி. தெய்வநாயகம் ஆசாரி, எம். ஜி. சிதம்பரம்: ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் க. செ. நடராஜன், க. வேலு பிள்ளை, க. இ. சரவணமுத்து, ச. சிவசாமி ஐயர், க. கா. மதியாபரணம், மெ. சிவசுப்பிரமணியம், வி. என். சின்னத்துரை, ஆர். சக்திவேல், க. சுப்பையா ஆசாரி, எம். எம். ஷெரிப், என். கோலப்பன் ஆச்சாரி, டி. செல்லப்பா ஆச்சாரி. வி. தம்பிப் பிள்ளை: ரூ. 0—8—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை. ஆக ரூ. 65—0—0

இலங்கை, யாழ்ப்பாணம், ஸ்ரீ ஜி. பெருமாள் சாமி மூலம்:

ரூ. 3—0—0: ஸ்ரீ ஆர். கே. ராமநாதன் செட்டியார் அண்டு பிரதர்ஸ்; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் ஆர். சாமிநாதன், பி. குமாரசாமி; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் கே. எம். வி. பொன்னையா, எஸ். வடிவேல், எஸ். வி. எஸ். கயிலாயம் செட்டியார், எஸ். பி. முத்தையா, என். வைத்யலிங்கம் அண்டு கோ., எஸ். எஸ். பொன்னுத்துரை, ஜெயலெக்ஷ்மி ஸ்டோர், ஏ. கே. டி. நல்லநாயகம், கே. ஏ. அருணாசலம் பிள்ளை அண்டு சன்ஸ், எஸ். மாணிக்கவாசகர் பி. கே. ஆர். காளயப்பன், எஸ். வைத்தியலிங்கம், கே. ஏகாம்பரம், ஏ. சுப்பிரமணியம், ஜெ. செபஸ்தியாம் பிள்ளை, ஏ. சுப. முத்தையா, கே. ஆர். முத்துமாரு, ஆர். எம். டி. மூலியாண்டி, எஸ். லிங்கலிங்கம், என். கே. முகம்மது, வி. கதிர்தம்பி, என். செல்லையா, எஸ். பி. எல். மாணிக்கம். ஆக ரூ. 30—0—0

எட்டயபுரம், பாரதி இலக்கிய மன்றம், பொக்கிஷதார் ஸ்ரீ டி. வி. ராமசாமி மூலம்:

ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் பொக்கிஷதார் டி. வி. ராமசாமி, இ. வே. சங்கரநாராயணக் கோனார், க. சண்முக சுந்தர ஓதுவார்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் ராம. கருப்பாசாமி மூப்பனார், கு. வீரணத்தேவர், ரா. அக்கைய்ய நாயக்கர், கே. சதாசிவமணியகாரர்.

ஆக ரூ. 10—0—0

இலங்கை, நியுவாரா இலியா, ஸ்ரீ கே. ஏ. வைத்தியலிங்கம் மூலம்.

ரூ 25—0 0: ஸ்ரீமான்கள் கே. ஏ. வைத்தியலிங்கம், எம். ஜி. ஆரோக்கியசாமி, வி. வீராசாமி, எஸ். ஜ. ஏசய்யா நாடார் அண்டு கோ. ஸ்ரீ பாலகிருஷ்ணா ஸ்டோர், ஜே. என். கோட்டார்; கே. வி. ஆர். செல்லய்யா பிள்ளை, ஜே. ஜே. கனகரத்னம், எம். எஸ். தீர்த்தவேலு: ரூ. 15—0—0: ஸ்ரீ பி. எம். கே. மாணிக்கம் பிள்ளை; ரூ. 10-0-0: ஸ்ரீமான்கள் எஸ். ஆர். ராசய்யா நாடார் அண்டு கோ, கே. கே. எம். முகம்தீன், ஏ. சுந்தரம்: ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் எஸ். கே. வையாபுரி, கே. ஏ. கனகரத்னம், ஏ. சிதம்பரம்; ரூ. 3—0—0: ஸ்ரீமான்கள் ஏ. ராமநாதன், கே. சோமநாதன், வி. எம். கருப்பய்யா; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் பி. முருகேசன், கே. பி. பெருமாள், கே. ராமசாமி.

ஆக ரூ. 300—0—0

ஜப்பல்பூர், கமாரியா, ஸ்ரீ கே. சி. மகாதேவன் மூலம்:

ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் கே. சி. மகாதேவன், ஏ. வி. ராமன், எஸ். குப்புஸாமி; ரூ. 3—0—0: பி. கே. ஏ. கபூர்: ரூ. 2-0-0: ஸ்ரீமான்கள் கே. ஆர். கிருஷ்ணன், ஜி. எம். சுப்பரெத்தினம், எஸ். கே. பாலு, எஸ். கிருஷ்ணன், பி. வி. ராமமூர்த்தி, எஸ். ஆர். ராம்: ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் பி. கே. தாமஸ், சி. ஜ. சாக்கோ, எஸ். அப்பாஸாமி, கே. வி. ராமநாதன், கே. வி. கிருஷ்ணன், வி. ஜான், எஸ். கோபால்ராவ், கே. வி. காமத், எம். டேனியல், கே. ராமநாதன், என். கே. பிள்ளை, வி. நாராயணன், எஸ். சுப்பரெத்தினம், வி. வி. நாராயணஸ்வாமி, ஏ. நாராயணஸ்வாமி, ஏ. வி. சுப்பிரமணியம்; ரூ. 0—12—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை.

ஆக ரூ. 46—12—0

(தொடரும்)

அது கட்டுப்பாட்டு விலை
யாய் இருக்காது. ஆனால்
சென்ற வருஷம் நான் விற்
றதில் பாதி விலைதான்.



நான் உனக்கு அந்த விலை
கொடுக்கமாட்டேன். உன்
னைப்பற்றி புகாரும் செய்கிறேன்

# அவன் திருட்டு விற்பனையை ஒழிக்க உதவுகிறான்

---

தேசிய போர்முனையின் பிரசாரம்

AAA 1384—D. TM

KALKI—18-2-1945

உங்கள் குழந்தை தவழும் பருவத்திலிருக்



கிறது. ஆனால், பனிரெண்டு வருஷங்

களில் உங்கள் குழந்தைக்கு நல்ல துணிகளும்

செலவு பிடிக்கும்

கல்வியும் தேவையாகும்..



## அவனது பிற்காலத்தை இப்பொழுதே உறுதிப் படுத்துங்கள்

1 அவைகள் பனிரெண்டு வருஷங்களில் 50 சதவிகிதம் உயர்கின்றன.

2 இந்த முதலீட்டின் பேரில் நீங்கள் வருமான வரி கொடுக்கவேண்டியதில்லை.

3 மூன்று வருஷங்களுக்குப் பிறகு எப்பொழுது வேண்டுமானாலும் சேர்ந்த வட்டியுடன் ரொக்கமாக மாற்றிக்கொள்ளலாம்.

4 நீங்கள் அவைகளை ரூ 10, 50, 100, 500 அல்லது 1000க்கு வாங்கலாம்.

5 மொத்தமாய் ரூ. 10 உங்களுக்கு கொடுக்காவிடில், 4 அணா, 8 அணா அல்லது ரூ. 1 க்கு சேவிங்க்ஸ் ஸ்டாம்புகளை வாங்கிப் பணத்தை மிச்சம் செய்து, அவைகளை நேஷனல் சேவிங்க்ஸ் சர்ட்டிபிகேட்டுகளாக மாற்றிக்கொள்ளலாம்.

6 நேஷனல் சேவிங்க்ஸ் சர்ட்டிபிகேட்டுகளையும் ஸ்டாம்புகளையும் சர்க்காரால் நியமிக்கப்பட்ட அதிகாரம் பெற்ற ஏஜண்டுகளிடமோ அல்லது சேவிங்ஸ் பீரோ அல்லது போஸ்டாபீஸ்களிலோ வாங்கலாம்.

## நேஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை வாங்குங்கள்

அவைகளைப்பெற முந்துங்கள். தாமதம் வேண்டாம்.

AAA 1236 TM

### போலீஸ் டயரி

ஜெயில் விஸிட்டர்:—உன் வாழ்க்கையே ரொம்ப அபாயமானதாக இருக்கும்போலிருக்கிறதே! நீ செய்கிற காரியத்தை எல்லாம் குறித்து வைத்துக் கொள்கிறதுதானே? அதை ஒருமுறை பார்த்தாலாவது திருந்துவாயல்லவா!

மாஜி கைதி:—அதை நான் ஏனுங்க எழுதணும்! போலீஸ்காரர்கள்தான் எழுதி வச்சிருக்காங்களே! —சரஸ்வதி.



### எத்தனை படி?

வீட்டுக்காரர்:—கோனாரே! பால் எப்படி ரூபாய்க்கு?

பால்க்காரர்:—இரண்டு படிங்க.



வீ. கா:—தண்ணீர் சேர்க்காத பாலாயிருக்கணும்.

பா. கா:—அப்டின்னு ரூபாய்க்கு ஒன்னரைப் படி தானுங்க!

வீ. கா:— மாட்டை வீட்டு வாசல்லே கொண்ணாந்து கறப்பீரா?

பா. கா:—அப்போ படி ஒரு ரூபா ஆகுங்களே.

வீ. கா:—சரி, தரேன்; ஆனால் என் எதிரில் கறக்கணும்.

பா. கா:—அப்படின்னு ரூபாய்க்கு அரைப் படிக்குமேலே கொடுக்கக் கட்டாதுங்களே! —மா. அருணாசலம்.



### என்ன வேஷம்?

ராஜு:—டேய், நாகராஜா, எங்கள் காலேஜில் வருஷாந்திரக் கொண்டாட்டத்திற்காக "வீரரமணி" நாடகம் போடப் போகிறார்கள். அதில் எனக்கும் ஒரு வேஷம் கொடுக்கப் பட்டிருக்கிறது.

நாகராஜன்:—அடேடே. "வீர ரமணி"க் கதை எனக்குத் தெரியுமே. ஆனால் அதில் பைத்தியம் ஒன்றும் வரவில்லையே! —கே. எஸ். சந்தானம்.



### தெரிந்த விஷயம்

ஆபீசுக்குப் புறப்படும் சமயம் தன் சட்டைப் பையில் கைவிட்டுப் பார்த்த கேசவராவ் தன் மனைவியைக் கூப்பிட்டு, "அடியே! உன் பிள்ளை சீனு எங்கே போயிட்டான்? கூப்பிடு அவனை! என் சட்டைப் பையிலிருந்து சில்லறையை அடிச்சுண்டு போயிருக்கான்!"

மனைவி:—ஏன் அவனை கோபிச்சுக்கறயள்? நானே ஒருவேளை எடுத்திருப்பேனோ என்னவோ?

கேசவராவ்:—நீ எடுத்திருக்க மாட்டாய். பையிலே இன்னும் காலணா மிச்சம் இருக்கே! —ராமு!

### அவன் கேட்டது

டிரங்குப்பெட்டி மிகவும் பெரிதாகத்தான் இருந்தது. போர்ட்டர் பிரயாசைப்பட்டு பார்த்தான். அசைக்கக்கூட முடியவில்லை.

வீட்டுக்காரர்:—இதை ஸ்டேஷனுக்குக் கொண்டு போக என்னப்பா கேக்கறே?

போர்ட்டர் (தலையைச் சொறிந்து கொண்டே):—ஒரு வண்டி வேணுங்க! —டி. கே. சுப்பிரமணியன்.



### சரியாய்ப் போயிற்று

கடன் கொடுத்தவர்:—இந்த ஐந்து ரூபாயை நான் ஏழாந் தடவையாக உம்மைக் கேட்கிறேன்.

கடன் வாங்கினவர்:—அது சரிதான்காணும்; ஆனால் இதே ஐந்து ரூபாயை நான் உம்மிடமிருந்து வாங்க எவ்வளவு தடவை கேட்டிருப்பேன் தெரியுமா? —ஆர். கே. ரங்கராஜன்.



### முழுமோசம்

மோட்டார் ஓட்டுவதற்கு லைசென்ஸ் வாங்க ஒருவன் போலீஸ் அதிகாரியிடம் சென்றான்.

போலீஸ் அதிகாரி (மோட்டார் ஓட்டியைப் பார்த்து):—உனக்கு கண் பார்வை சரியாயில்லை என்று சந்தேகிக்கிறேன். அதோ நிற்கும் அந்த மோட்டாரின் நம்பரைப் பார்த்துச் சொல்.

மோட்டார் ஓட்டி:—மோட்டார் எங்கே நிற்கிறது? —மு. க. வேதாரண்யம்.



### கூப்பிட்ட காரணம்.



பாலு:— சாப்பிட வாருங்கள்.

சீனு:—அது எனக்குத் தெரியும், நான் தாம்பூலம் போட்டுக் கொண்டு இருக்கிறேன்.

பாலு:—நீங்கள் தாம்பூலம் போட்டுக்கொண்டிருப்பதைப் பார்த்து விட்டுத்தான் உங்களைக் கூப்பிட்டேன். —ஆர். சுந்தரேசன்.



### அப்படியா

ஒருவர்:—நானும் ராமுவும் ஒரே வகுப்பில் படித்தோம். இப்பொழுது இருவரும் ஒரே வேலையில் இருக்கிறோம்.

நண்பர்:—ஓஹோ!

ஒருவர்:—ஆனால் எங்கள் இருவர் வேலைக்கும் ஒரு சிறு வித்தியாசம்தான்! அவன் கலெக்டர்; நான் பில் கலெக்டர்! —எஸ். பாலசுப்ரமணியன்

# சர்க்கஸ்காரன்

கே. எஸ். ஸ்ரீனிவாசன்

'டக், டக்', 'டக், டக்!'—ஒன்றன் பின் ஒன்றாய்க் கூரிய கத்திகள் பலகையில் போய்ப் பாய்கின்றன. நிறுத்தி வைக்கப் பட்ட ஓர் பெரிய பலகையின் நடுவில் அதன் மேல் சாய்ந்த வண்ணம் புன்னகை பூத்த வதனத்துடன் ஒரு ஸ்திரீ நிற்கிறாள். அவளைச் சுற்றிக் கோடு வரைந்தாற்போல் கத்திகளைப் பதித்துப் பார்ப்போரைப் பிரமிக்கச் செய்கிறான் ஓர் இரும்பு நெஞ்சம் படைத்த மனிதன். அவன் தான் அவளுடைய கணவன்.



எங்கள் ஊருக்கு விஜயம் செய்த சர்க்கஸ் கம்பெனியாரின் பல வீரச் செயல்களில் இது ஒன்றே எல்லோரையும் பிரமிக்கச்செய்தது. திரள் திரளாக இதைப் பார்க்கவே ஜனங்கள் கூடினர். இவ்வித்தையைப் பார்ப்பதோடு மட்டும் நான் திருப்தியடையவில்லை. அச் சர்க்கஸ்காரனை அறிந்துகொள்ள விரும்பினேன்.

ஒரு நாள் சர்க்கஸ் கூடாரத்துக் கருகில் அவனைச் சந்தித்தேன்.

" தங்கள் கலையை நான் மிகவும் பாராட்டுகிறேன் " என்றேன்.

" கலையா? ...... ஓ, கத்தி வீசுவதைச் சொல்லுகிறீர்களோ? ஹூம். விடா முயற்சியுடன் வருடக் கணக்கில் அப்பியாசம் செய்தால் இது ஒரு பிரமாதமா?" என்றான் சாவதானமாக.

" ஆனால் ஒரு சிறு பிழை ஏற்பட்டாலும் கொடிய ஆபத்தாயிற்றே?"

"பிழையா? ஒருகாலும் ஏற்படாது. பழக்கம் தான் காரணம்" என்று கூறிச் சற்றுத் தயங்கினான். பிறகு " பிழை ஏற்பட்டால்தான் தேவலையே!" என்று முணுமுணுத்தான். அவன் முகம் மாறுதலடைந்தது. " என்ன சமாசாரம்?" என்று கேட்பது போல் என் கண்கள் அவனையே நோக்கின.

" பிழை ஏற்படுவதென்பது முடியாத காரியம். அது உமக்குத் தெரியாவிட்டாலும் அந்த மோசக் காரிக்கு நன்றாய்த் தெரிந்து விட்டது."

" யாருக்கு?"

"என் மனைவிக்குத்தான். ஒவ்வொரு இரவும் மின்சார வெளிச்சத்தில் கண்ணைக் கவரும் வர்ணங்களில் ஆடைகளணிந்து, பலகையின்மேல் சாய்ந்து கொண்டு என் கூரிய வாள்களை அலக்ஷியமாகப் பார்த்துக் கொண்டு புன்முறுவல் செய்கிறாளே, அவள் தான் நான் மணந்து கொண்ட பேய். அவள் எனக்குத் துரோகம் செய்து விட்டாள். வெள்ளைச் சட்டை யணிந்து கச்சலாய் அசடுமாதிரி ஒருவன் பல வர்ணப் பந்துகளை வைத்துக்கொண்டு அம்மானை ஆடுகிறானே, அவனுக்குத் தன் இதயத்தைக் கொடுத்து விட்டாள்.........எனக்கு இவ் விஷயத்தைப் பற்றிக் கூட வருத்தமில்லை."

"இல்லையா?"

"இல்லவே இல்லை. மனித வர்க்கத்துக்கு இது சகஜம்தானே? எனக்குக் கோபத்தை யுண்டாக்குவது வேறொரு விஷயம். நான் அவளைச் சுற்றிலும் கத்திகளை வீசும்போது அவன் சிரிக்கிறானல்லவா? அச்சிரிப்பு மனோ திடத்தையும் துணிச்சலையும் குறிக்கிற தென்று நினைக்கிறீர்? ஹூம். அதன் கருத்து எனக்கல்லவோ தெரியும்? அவன் என் கூரிய வாள்களை அலக்ஷியம் செய்கிறான்; என்னை ஏளனம் செய்கிறான். நான் அவளைக் கொல்ல எண்ணினாலும் என்னால் முடியாதென்று அவன் அறிந்து கொண்டு விட்டான்."

"கொல்லவா?"

"ஆம். எனக்குத் துரோகம் செய்ததற்காக அல்ல. என் வித்தையையும் என் கத்திகளையும் அவமதிப்பதற்காக. ஒவ்வொரு நாளும் கத்திகளைக் கையில் எடுக்கும்போது எனக்கோர் அரிய சந்தர்ப்பம் கிடைக்கிறது. ஒரு அரை அங்குலம் நகர்த்தி அவள் கழுத்துக் கருகில் கத்தியை வீசினால் உடனே அவள் இறப்பாள்—ஆனால்—"

"ஆனால் என்ன?"

"அதுதானே உமக்கு இன்னும் புரியவில்லை. ஆஹா! நான் எவ்வளவு முயற்சித்



"என்ன பாகவதர்வாள்! மங்களத்தில் முதல் அடியை மட்டும் சொல்லிக் கொடுத்து விட்டு சிட்சையை முடித்து விட்டீர்களே!"

"மங்களத்தில் 'நீநாம ரூபமுலகு...' என்ற முதல் அடியை மட்டும் பாடத் தெரிந்தால் போதும். அதற்கு மேல் சபையில் யாரும் இருக்க மாட்டார்கள்."

தாலும் என் கைகள் என் இஷ்டப்படி பிழை செய்வதில்லை. ஒவ்வொரு நாளும் அவன்மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ள முயற்சிக்கிறேன்; முடியவில்லை. அவன் கேலியாகச் சிரிக்கிறான். ஒவ்வொரு கத்தியும் ஒரு நூலிழையாவது நகர்ந்து விழுமா என்று பார்க்கிறேன். ஆனால் அவை எப்போதும்போல் சரிவரத்தான் பாய்கின்றன. ஒன்றாவது அவளுடைய மதம் பிடித்த சரீரத்தில் பாய்ந்தால்தானே?"

"ஏன்?"

"என்னுடைய வித்தையை நன்றாய்ப் பழகி நான் அதற்கு அடிமையாய் விட்டேன்; ஒரு பிழையற்ற யந்திரம் போலாகி விட்டேன். மனதிலுள்ள எண்ணத்தை நிறைவேற்றக் கைகள் மறுக்கின்றன. எவ்வளவு முயற்சித்தாலும் என்னால் இவ்வித்தையில் பிழை செய்ய முடியாது. இதை அவன் மிகவும் நன்றாய் உணர்ந்து கொண்டு விட்டான்......இவ்வளவு அற்பமான வித்தையைத்தான் சுவாமி, நீர் 'கலை' என்கிறீர்!" என்று கூறி முடித்தான். அவன் முகத்தில் தோல்விக்குறி காணப்பட்டது. தலை குனிந்த வண்ணம் வீட்டை நோக்கி நடந்தேன்.



# பூனைக்கு உபதேசம்

சாவி

[இந்தக் கட்டுரையில் வரும் பெயர்கள் யாவும் நிஜப் பெயர்களே. பூனை என்றால் அது சர்ச்சிலையோ, நாய் என்றால் தேசிய இயக்கத்தையோ, எலிகள் என்றால் சமூகத் தலைவர்களையோ குறிப்பிட வில்லை.]

நான் ஒரு சாதாரண நாய்தான். என்னைப் போன்ற நன்றியுள்ள ஒரு பிராணியைப் படைத்த கடவுள் பூனையைப் போல் நன்றிகெட்ட ஜந்துவையும் ஏன் படைத்தார் என்று சில சமயங்களில் எனக்குத் தோன்றுவதுண்டு.

நான் எந்தப் பூனையையும் வலிய அழைத்து என் வீட்டைக் காக்கும் பொறுப்பை அதன் தலையில் சுமத்தவில்லை. என் வீட்டில் உள்ள பாலைத் திருடிக் குடிக்கச் சொல்லவும் இல்லை. அதுவாகவேதான் என் வீட்டில் ஒன்றரை வருஷங்களுக்கு முன்பாகக் குடியேறிற்று. என் வீட்டுப் பாலைக் குடித்துக் கொழுத்தது. தன் குடும்பத்தை விருத்தி செய்து கொண்டது. இப்போது விரட்டினாலும் போகமாட்டேன் என்று பிடிவாதம் பிடிக்கிறது!

“அவன் அப்படித்தான் குரைத்துக் கொண்டிருப்பான். நாம் பாட்டுக்கு நம்முடைய காரியத்தை நடத்திக் கொண்டிருப்போம்” என்பது அதன் எண்ணம் போலும்! ஏ, பூனையே! என் வீட்டுக்கு நான்தான் அதிகாரி, போ, போய்விடு; என் வீட்டைக் காக்கும் பொறுப்பு உனக்கு வேண்டாம்!

என்னுடைய இந்தக் கூற்றைக் கேட்டு பூனை ஒரு கோபச் சிரிப்புச் சிரிக்கிறது. அந்தச் சிரிப்புக்கு என்ன அர்த்தம்? “இந்த வீட்டை நானல்லவா பாதுகாக்கிறேன். நான் இல்லையென்றால் இந்த வீடு இரண்டு பட்டிருக்காதா? இந்த எலிகளெல்லாம் ஒன்றுக்கொன்று சண்டை போட்டுக் கொண்டு உன் வீட்டை நிர்மூலமாக்கி யிருக்காதா? அதோடு ஒன்றரை வருஷ காலமாய் இந்த வீட்டுப் பாலைக் குடித்து விட்டு இப்போது நான் எப்படி உங்களை விட்டுப் பிரிவேன்? நான் போய்விட்டால் ‘உன் வீட்டுக் குழப்ப’த்தை (உன் நாட்டுக் குழப்பமல்ல!) யார் பார்த்துக் கொள்வது?” என்று எண்ணியே பூனை சிரிக்க வேண்டும்.

ஏ, பூனையே! இந்த வீட்டுக்குள் அன்னியன் வந்தால் அப்போது உனக்கு என்னுடைய உதவிதானே வேண்டியிருக்கிறது? என்னைக் கொன்று நீ அன்னியப் பூனைகளை விரட்டிவிட்டு, நீயே இந்த வீட்டில் குடியிருக்கப் பார்க்கிறாயோ? அன்னியப் பூனைகளை நான் எவ்வளவு வெறுக்கிறேனோ, அவ்வளவுக்கு உன்னையும் வெறுக்கிறேன். எஜமானனிடத்தில் உனக்கு நன்றி ஏது? விசுவாசம் ஏது? உனக்கு எஜமானனைவிட குடி இருக்கும் இந்த வீடுதானே முக்கியம்? அதைவிட இந்த வீட்டில் உள்ள பால்தானே முக்கியம்? நீ பாட்டுக்கு இப்படிப் பாலையும் தயிரையும் குடித்துக் கொண்டிருக்க வேண்டியது. நானோ நாளொரு தோலும் பொழுதொரு எலும்புமாய் இளைத்து வாட வேண்டியது.

இந்த வீட்டில் நீ செய்யும் அக்கிரமங்கள் அனந்தம். உனக்கு எல்லா இடங்களும் சொந்தம். சமையலறை, படுக்கை அறை, மூலை முடுக்கு வாசல் தோட்டம் முதலிய சகல இடங்களிலும் உன்னுடைய ஏகாதிபத்தியம்தான். சமையலறையா? கொட்டி உருட்டுகிறாய். மூலை முடுக்குகளா? படுக்கையறையா? வீட்டு வாசலா? எங்கும் உன் நடமாட்டம்தான். இதனாலெல்லாம் என்னுடைய எஜமானன் படும் கஷ்டம் கொஞ்ச நஞ்சமல்ல.

பூனை குறுக்கே போனால் அபசகுனம் என்பது உனக்கு நன்றாய்த் தெரியும். இருந்தாலும் என் எஜமானன் எந்தக் காரியத்தைச் செய்ய விரும்பினாலும் அவர் செய்யும் ஒவ்வொரு காரியத்துக்கும் நீ குறுக்கே வருகிறாய். வேண்டாம்; உனக்கு இவ்வளவையும் நல்ல தனமாய்ச் சொல்கிறேன். வீட்டைக் காப்பது நாய்தானே தவிர பூனையல்ல. இந்தச் சின்ன விஷயம் உனக்கு ஏன் தெரியவில்லை? இதோ பார்; இந்த வீட்டைக் காக்கும் பொறுப்பை என்னிடமே விட்டுவிடு; உன் நடையை இத்துடன் கட்டிக்கொள்.



# கம்பர் தரும் காட்சி



டி.கே.சி.

## 92. குமுறும் இரண்டு

பரதன் சித்திரகூட பர்வதத்துக்கு வந்தான். எப்படி வந்தான்? தலையில் பளுவான சடை, நெஞ்சில் தாங்க முடியாத துயரம், அறிவு, இதயம் எல்லாம் மயங்கி நிற்கின்றன.

ராமனைக் கண்டதும் பரதனுக்குத் தந்தையையே கண்டதாகப் படுகிறது. சீதையைத் தனியான இடத்தில் பார்க்கிறான்—பார்த்ததும் தாயென்று கருதிக் காலில் விழுந்து கதறுகிறான்.

சீதைக்கு விஷயம் ஒன்றும் தெரியவில்லை. பரதனைக் கைகளால் தூக்கி நிறுத்திக்கொண்டு தந்தை இறந்து போனதாக இராமன் சொன்னான்.

எதிர்பாராத செய்தி! நெஞ்சில் இதயத் துடிப்பு நிற்க ஆரம்பித்து விட்டது. உடம்பு அப்படியும் இப்படியுமாக நடுங்குகிறது.

துன்எனும் நெஞ்சினாள்
துளங்கி னாள், துணைக்

கண்எனும் நெடுங்கடல்
கலுழி கான்றிட,

மண்எனும் செவிமேல்
வைத்த கையினாள்,

பண்எனும் கிளவியால்ப்
பன்னி ஏங்கினாள்.

[துளங்கினாள் : நடுங்கினாள்; துணைக்கண் எனும் நெடுங் கடல் : கடல் போன்ற இரண்டு பெரிய கண்களும்; கலுழி கான்றிட : இரத்தம் கலந்த கண்ணீரைக் கொட்ட; மண் எனும் செவி மேல் : தன்னை அபிமானித்து வளர்த்த பூமாதேவியின் மீது; வைத்த கையினாள் : கையை வைத்துக் கொண்டு; பண் எனும் கிளவியால் : சங்கீதமே என்று சொல்லும்படியான வார்த்தைகளைக் கொண்டு; பன்னி ஏங்கினாள் : பலவாறாகச் சொல்லிச் சொல்லி அலறினாள். குறிப்பு:— கொஞ்சம் கண்ணை மூடிக் கொண்டு மனக்கண் கொண்டு சீதையின் நிலையைப் பார்த்தால் அபூர்வமான சோகப் படலம் அப்படியே வந்து நிற்கும்.]

கணவன் பின் செல்லக் கிடைத்த காரணத்தால், நடந்து வந்த காடெல்லாம் அயோத்தியாகவே இருந்தது சீதைக்கு. யாதொரு வருத்தமும் ஏற்படவில்லைதான்.

கல்நகு திரள்புயக்
கணவன் பின்செல,

நல்நகர் ஒத்தது
நடந்த கானமும்

மன்னவன் துஞ்சினான்
என்ற மாற்றத்தால்

அன்னமும் துயர்க்கடல்
அடிவைத் தான்அரோ.

[கல்நகு திரள்புயக் கணவன் : கல்லைப் பார்த்து ஏளனம் செய்யும்படி அப்படித் திரண்ட புயத்து ராமன்; மன்னவன் துஞ்சினான் : தசரதன் இறந்து போனான்; அன்னமும்: சீதையும். குறிப்பு: அயோத்தியை விட்டுப் புறப்பட்டது முதல் சீதை மன உல்லாசத்துடனேதான் இருக்கிறாள் — இப்போதுதான் முதல் முதலாகத் துன்ப அனுபவத்துக்கு உள்ளாகிறாள் என்பது விஷயம்.]

# இது சகஜம்



சைக்கிளில் குஷியாகப் போகிற வர்கள் ......



நாலு பேருக்கு எதிரில் தவறி விழுந்து விட்டால் ......



அடியே படாதது போல் உட னேயே சைக்கிளில் ஏறி ......



கொஞ்ச தூரம் போன பிறகு இறங்கிக் காயத்தைத் துடைத்து விட்டுக் கொள்வது சகஜம்.

அப்படிப் புலம்பி நைந்துகொண் டிருந்த சீதையை அங்குள்ள முனிவர் களது மனைவியர் வந்து ஆற்றுக்கு அழைத்துச் செல்லுகிறார்கள் :

ஆயவள் தன்னைநேர்ந்(து)
அங்கை ஏந்தினர்,

தாயரின் முனிவர்தம்
தருமப் பன்னியர் ;

தூயநீர் ஆட்டினர்,
துயரம் நீக்கினர்,

நாயகற் சேர்த்தினர்
நடுக்கம் நீங்கவே.

[ஆயவள்] தன்னை நேர்ந்து : அப்படி இருந்த சீதையிடம் வந்து : அங்கை ஏந்தி னர் : கைகளினால் தாங்கி : தாயரின் : பெற்ற தாயரைப் போலவே : பன்னியர் : மனைவியர் : நாயகற் சேர்த்தினர் : ராமனிடம் கொண்டு போய்ச் சேர்த்தார்கள். அப்படி யாவது பயம் நீங்கட்டும் என்று எண்ணி.]

ராமன் பக்கத்தில் சீதையை உட் கார்த்தி ஆய்விட்டது. இனி என்ன நடக்கப் போகிறது? ராமன் முன் யார் வருகிறார்கள்?

தேன்தரு தெரியல்அச்
செம்மல் நால்வரை

ஈன்றவர் மூவரோ(டு)
இருமை நோக்குறும்

சான்றவர் குழாத்தொடும்,
தருமம் நோக்குறும்

தோன்றல் பால்ச், சுமந்திரன்
தொழுது தோன்றினன்.

[தேன்தரு தெரியல் அச்செம்மல் நால் வரை : தேன்கசியும் மாலை சூடிய இளவரசர் நால்வரையும் : ஈன்றவர் மூவரோடு : பெற்ற மூன்று தாய்மாரோடு : இருமை நோக்குறும் சான்றவர் : இகலோக வாழ்வோடு பரலோக வாழ்வையும் கருதிய அறிஞர்கள் : தருமம் நோக்குறும் தோன்றற்பால் : தருமம் ஒன்றையே லக்ஷியமாகக் கொண்ட ராம னிடம்.]

தாய்மாரை, சான்றோரை, தந்தைக்கு உயிருக் குயிரான சுமந்திரனைத்தான் சந்திக்கிறான் ராமன். ராமனது செயலை அடுத்த இதழில் பார்க்கலாம்.

# "நீங்கள்



# உங்கள் பணம்



# உங்கள் எதிர்காலம்"

**"என் பணம் எனக்குத்தான்** சொந்தம். என் விருப்பம் போல் ஏன் நான் **அதைச் செலவிடக் கூடாது?"** என்று சொல்லலாம், செலவிடலாந்தான். **உங்கள் நெற்றி** வெயர்வை நிலத்தில் விழப்பாடுபட்டுச் சம்பாதித்திருப் **பீர்களானால், அதை வீணாக்கிவிட** நீங்கள் விரும்பமாட்டீர்கள். அனாவசிய **மாகவும் அதிக விலை** கொடுத்தும் நீங்கள் வாங்கும் ஒவ்வொரு முறையும் **பணத்தை வீணாக** எறிந்துகொண்டுதானிருக்கிறீர்கள். சாதாரண விலைக் **குச் சாமான்கள்** விற்கப்படும் வரை நீங்கள் வாங்காதிருப்பது நல்லது.

எதிர் காலத்தை மறந்துவிடாதீர்கள். வெற்றி கிடைத்து, சமாதானத் துறையில் இந்தியா தன் முழு பலத்தையும் மூலப் பொருட்களையும் பயன் படுத்தும் போது, யுத்தத்திற்குப் பிறகு ஏற்படக் கூடிய முன்னேற்ற வேலைகளுக்கு எவ்வளவு முதல் கிடைக்குமோ அவ்வளவும் தேவைப்படும். இப்போது நீங்கள் சேமிப்பதெல்லாம், எதிர்காலத்தில் உங்களுக்கு உறுதியான ஊன்று கோலாகும்.

**உங்களால் இயன்றவரை**

**மிச்சப்**

**படுத்துங்கள்**

**மிச்சப் படுத்தியதை**

**முதலீடு செய்யுங்கள்.**

இன்ஷியூரன்ஸ், அரசாங்கக் கடன் பத்திரங்கள், போஸ்டல் சேவிங்ஸ் செர்டிபிகேட்டுகள், தபாலாபீஸ் சேமிப்பு, சேமிப்பு, கூட்டுறவு சங்கங்கள் ஆகியவை நல்ல முதலீடுகள். உங்கள் பணம் பத்திரமாயிருப்பதுடன், நல்ல வருமானமும் அளிக்கின்றன.

**தேசியப் போர்முனையார் விடுக்கும் தேசிய வேண்டுகோள்**

AAA 1116 TM

# நஷ்ட ஈடு

பகீரதன்

தங்கராஜன் எவ்வளவோ கஷ்டப்பட்டு ஒரு கண்ணாடிக் கடையில் வேலைக்கு அமர்ந்தான். தினம் தள்ளுவண்டியில் கண்ணாடி சாமான்களை வைத்துக் கொண்டு, தெருத் தெருவாக விற்பதுதான் அவன் வேலை.

ஒரு நாள் ராணுவ லாரி ஒன்று அவன் வண்டியின் மீது மோதவே, தள்ளு வண்டியில் இருந்த அத்தனை கண்ணாடி சாமான்களும் உடைந்துவிட்டன. செய்வது இன்னதென்று தெரியாமல் திகைத்துப் போய் நின்று கொண்டிருந்தான்.

அவன் மனம் மிகவும் வேதனை அடைந்தது. சாயங்காலம் முதலாளிக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் விழித்தான். வேண்டிய வசவும் கிடைக்கும்; வேலையும் போய்விடும் என்று எண்ணிய போது, அவன் கண்ணிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீரே வந்துவிட்டது.

சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரே கூட்டம் கூடிவிட்டது. அவனுடைய கஷ்டத்தைக் கண்ட ஒருவர், " அப்பா! கவலைப்படாதே! உனக்கு ஏற்பட்ட கஷ்டத்தை நாங்கள் தருகிறோம். உன்னுடைய மேல் துண்டைக் கீழே விரித்துப் போடு! " என்றார்.

அவனும் தன்னுடைய துண்டை விரித்துப் போட்டான். உடனே அந்தமனிதர் ஒரு நாலு அணாவை எடுத்து அந்தத் துண்டில் போட்டார். அதைப் பார்த்த எல்லோரும் தலைக்கு ஒரு அணாவும் இரண்டணாவுமாகப் போட்டார்கள். பணம் சேர்ந்து விட்டது.

இந்தச் சமயத்தில் எதிர்பாராத சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. முதலில் தங்கராஜுக்கு அநுதாபப் பட்ட அந்த மனிதர், துண்டில் கிடந்த பணத்தையெல்லாம் எடுத்து எண்ணித் தம் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டு நடந்தார்.

அதைப் பார்த்த ஜனங்கள் தங்கராஜனை நோக்கி, "என்ன, ஐயா! சும்மா நிற்கிறீரே? அவருக்காகவா நாங்கள் தர்மம் செய்தோம்?" என்று கேட்டனர். " மன்னிக்க வேண்டும்; அவர்தான் என் முதலாளி! உடைந்து போன கண்ணாடி சாமான்களெல்லாம் அவருடையது தான்!" என்றான் தங்கராஜன்.

# "பாம்பு! பாம்பு!"

அ. சம்பந்தன்

கந்தசாமியின் மனைவி செல்வி தன் கணவனிடம் என்னவெல்லாமோ பேசிக் கொண்டிருந்தாள். அதைச் சிறிதும் காதில் போட்டுக் கொள்ளாமல் ஏதோ தீவிர யோசனையில் ஆழ்ந்திருந்தான் கந்தசாமி.

திடீரென்று, " ஐயோ! பாம்பு! பாம்பு!" என்று கத்திக் கொண்டே ஆவேசம் வந்தவன் போல் வெளி வாசலுக்கு ஓடினான். செல்விக்கு ஒன்றும் புரியவில்லை. அவளும் அவன் பின்னாலேயே ஓடினாள்.

உடனே அங்கிருந்தவர்களில் சிலர் கம்பும் கோலுமாக கந்தசாமியின் வீட்டுக்குள்ளே படையெடுத்தனர். மூலை முடுக்கெல்லாம் தேடிப் பார்த்தாய்விட்டது. கடைசியில் அங்கிருந்த ஒரு பிரமாண்டமான தேக்கு மரப் பெட்டிக் கடியில் தங்களுடைய பார்வையைச் செலுத்தினர். கடைசியில் எல்லோரும் சேர்ந்து கொண்டு எப்படியோ பிரம்மப் பிரயத்தனம் செய்து அப்பெட்டியைத் தூக்கி வேறு இடத்தில் வைத்தனர். பாவம்! கந்தசாமி இதையெல்லாம் பார்த்த வண்ணம் உடல் நடுங்கியவனாய் நின்று கொண்டிருந்தான்.

பெட்டியை அப்புறம் தூக்கி வைத்துங் கூட அவர்கள் கண்ணுக்குப் பாம்பு மட்டும் தென்படவில்லை. அங்கும் இங்கும் அலைந்து தேடியதால் அலுப்படைந்து விட்டனர். கடைசியில், நடுக்கத்துடன் நின்று கொண்டிருந்த கந்தசாமியைப் பார்த்து, "நீ ஒன்றுக்கும் பயப்படாதே. பாம்பு எங்கேயோ மறைந்து விட்டது. தைரியமாயிரு" என்று எல்லோரும் சொல்லிவிட்டு வெளியேறினர்.

அவர்கள் வெளியே போனதுதான் தாமதம், கந்தசாமி விழுந்துச் சிரித்தான்.

" ஏன் இப்படிச் சிரிக்கிறீங்கோ?" என்று கேட்டாள் செல்வி.

" அடியே, செல்வி! நம்ம வீட்டில் பாம்பும் வரலே, கீம்பும் வரலே! அந்தப் பெட்டியை அங்கிருந்து வேறே இடத்திலே தூக்கி வைக்க முடியாமே தவிச்சேன். கொறைஞ்சது பத்து ஆளாவது சேர்ந்து தூக்க வேண்டிய பெட்டியை நான் ஒருத்தன் தூக்க முடியுமா? அதுக்காகத்தான் இந்த யுக்தி!" என்றான் கந்தசாமி.

# இதுவும் ஒரு பிரகிருதி!



## நாடோடி



வெகு காலமாகப் பார்க்காத என் நண்பர் கணபதி அவர்களை நேற்றுக் காலையில் சந்தித்ததும், சடாரென்று ஒரு எண்ணம் தோன்றி என்னைப் பெரிதும் வாட்டியது. அடாடா! இத்தனை நல்ல பிரகிருதியை இதுவும் ஒரு பிரகிருதி ஜாபிதாவில் சேர்க்காமல் விட்டு விட்டோமே என்று மிகவும் வருத்தப் பட்டேன்.

ஆனால் அவர் இப்படி இன்றுவரை விடுபட்டுப் போனதற்குக் காரணம் நான் அல்ல; அவரே தான்!

நாம் ஒருவருடன் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகப் பழகுகிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு அவர்தன் ஞாபகம் அடிக்கடி வந்துகொண்டிருக்கும் என்பது உலக இயற்கை. ஆனால் நண்பர் கணபதி மாத்திரம் இந்த இயற்கைக்கு விதி விலக்கு. நாம் அவருடன் நெருங்கிப் பழகப் பழக அவர் ஞாபகம் மறந்து கொண்டே போகும். அதற்குப் பதில் இன்னொருவர் ஞாபகம் தான் நமக்கு வந்துகொண்டிருக்கும்.

அந்த இன்னொருவர் யார் என்று தெரிந்து கொள்ள வேண்டுமா? இதோ கணபதியே வந்து விட்டார். அவரிடம் நான் கொஞ்ச நேரம் பேசுவதற்குள் நீங்களே தெரிந்து கொண்டு விடுவீர்கள், அந்த இன்னொருவர் யார் என்று.

“அட, கணபதியா! எங்கே ஸார், உங்களைக் கண்ணிலேயே காணோம்?”

“காணாமல் என்ன ஸார்? நீங்கள் தான் நம்மைக் கவனிப்பதே இல்லை. நேற்றுக்கூட நீங்கள் இந்த வழியாகப் போனதாக என் மனைவி சொன்னான். இவ்வளவு தூரம் வந்தவர் கொஞ்சம் தயவு வைத்து என்னை எட்டிப் பார்த்து விட்டுப் போகக் கூடாதா?”

“என்ன, நீங்கள் இங்கேயா இருக்கிறீர்கள்? எழும்பூரில் அல்லவா இருக்கிறீர்கள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன்!”

“அந்த வீட்டைக் காலி பண்ணி விட்டேன், ஸார்! வீடு பிடிக்கவில்லை என்று என் மனைவி சொன்னான். ஆகவே அந்த வீட்டைக் காலி பண்ணி விட்டு இங்கே மயிலாப்பூருக்குக் குடி வந்து விட்டேன்.”

“அதுதானே பார்த்தேன். என்னடா, ஆசாமியைக் கண்ணிலேயே காணோமே என்று நினைத்தேன். ஆமாம், அது இருக்கட்டும், இது என்ன கட்டுப் புஸ்தகம் சைக்கிளில் வைத்துக் கட்டிக் கொண்டு போகிறீர்களே, ஏதாவது குறுக்குப் பரீட்சைக்கு மும்முரமாகப் படிக்கிறீர்களோ!”

“பரீட்சையாவது, கிரீட்சையாவது! இந்தப் புஸ்தகமெல்லாம் எனக்கு இல்லை ஸார். எல்லாம் என் மனைவிக்கு ஸார்! இதெல்லாம் அவன்தான் படிக்கிறான். எனக்கு எங்கே ஒழியறது!”

“ஆமாம், உங்கள் கிட்டத்தான் மோட்டார் சைக்கிள் இருந்ததே, அதில் போகாமல் ஏன் இப்படி சைக்கிளில் போகிறீர்கள்?”

“அதுவா? அது எங்கேயோ பழைய சைக்கிள் அல்லவா வாங்கினேன்? அது தினம் ஒரு ரிப்பேர் ஆகிக் கொண்டிருந்தது. அதைப் பார்த்து விட்டு என் மனைவி அதை விற்று விடு என்றான். விற்று விட்டேன்.”

“அன்றைக்கு உங்களைச் சங்கீதக் கச்சேரியில் கூடப் பார்த்தேன். கண்டு பேசனும் என்று நினைத்தேன். ஆனால் அதற்குள் நீங்கள் கூட்டத்தில் மறைந்து விட்டீர்கள்... ஆமாம், ஏது திடீர் என்று சங்கீதத்தில் உங்களுக்கு இத்தனை பிரேமை? சங்கீதம் என்றால் தூக்கு என்ன விலை என்று கேட்கப் பட்டவர்களாச்சே நீங்கள்?”

“அச்சச்சோ! நான் எனக்காகக் கச்சேரிக்குப் போகவில்லை ஐயா! என் மனைவிக்குக் கச்சேரி என்றால் உயிர். அவன் போகணும் என்றான். அதற்காக நானும் கூடப் போனேன். சரி, எனக்கு வாசக சாலைக்கு நாழியாகிறது. திரும்பி

வந்ததும் என் மனைவி காத்துக் கொண்டிருப்பாள். அவளை அழைத்துக் கொண்டு நாடகத்துக்குப் போயாக வேண்டும். நாடகங்கள் என்றால் அவளுக்கு வெகு ஆசை."

இதோ கணபதி போய் விட்டார். இத்தனை நேரம் நான் அவருடன் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்களே, அதிலிருந்தே நான் குறிப்பிட்ட இன்னொருவர் யார் என்று தெரிந்து கொண்டிருப்பீர்கள். ஆம், நீங்கள் யூகித்தது ரொம்ப சரி. அந்த இன்னொரு ஆசாமி அவர் மனைவிதான்.

இத்தனை நேரம் கணபதியுடன் பேசிக் கொண்டிருந்தோமே, அவரைப்பற்றி ஏதாவது தெரிந்து கொண்டோமா, பாருங்கள்! அவர் மனைவிக்கு எழும்பூர் வீடு பிடிக்கவில்லை, அவர் மனைவிக்குப் புஸ்தகங்கள் என்றால் இஷ்டம், அவர் மனைவிக்குச் சங்கீதக் கச்சேரிகள் என்றால் உயிர், அவர் மனைவிக்கு நாடகங்கள் என்றால் ஆசை என்று இப்படி அவர் மனைவியின் குணநிசயங்களைப் பற்றியே தெரிந்து கொண்டோமே யொழிய, நண்பர் கணபதியைப் பற்றி ஒன்றும் தெரிந்து கொள்ளவில்லை.

நண்பர் கணபதியுடன் எவ்வளவு நேரம் பேசினாலும் அவரைப் பற்றி ஒன்றும் தெரிந்து கொள்ள முடியாது. அவர் மனைவியைப் பற்றித்தான் தெரிந்து கொள்வோம்.

நண்பர் கணபதியே இப்படித்தான். அவர் பேச்சு, செயல், எண்ணம் இவற்றைப் பார்க்கும்போது தமக்கு என்று அவர் தனி ஆசை, இஷ்டம், அபிப்பிராயம் ஏதாவது வைத்துக் கொண்டிருக்கிறாரா என்பதே சந்தேகந்தான். தமக்கென்று ஒரு காரியமாவது செய்து கொள்கிறாரா என்றால், இருக்காது.

தினம் ஆபிசுக்குப் போகிறாரா? அதுவும் அவர் மனைவிக்காகத்தான்.

"எங்கப்பா எனக்கு வைத்து விட்டுப் போயிருக்கும் சொத்தை வைத்துக் கொண்டு நான் நாலு பேருக்கு வேலை கொடுக்கலாம் ஸார். இருந்தாலும் என் மனைவி, புருஷன் என்றால் உத்தியோகம் என்று ஒன்று இருந்தால் தான் கௌரவம் என்று வேலையை ஒப்புக்கொள்ளச் சொன்னாள். ஒப்புக் கொண்டு விட்டேன்" என்பார்.

தினம் சாயந்திரம் உலாவப் போகிறாரா? அதுவும் அவருக்காக அல்ல. தம் மனைவிக்காகத்தான். "சாயந்திரம் ஆபீஸிலிருந்து திரும்பியதும் எனக்கு நிம்மதியாக உட்கார வேண்டும் என்று தான் ஸார். ஆனால் என் மனைவிக்கு என்னமோ தினம் டிரஸ் பண்ணிக் கொண்டு உலாவப் போகவேண்டும் என்று. அதற்காக நானும் கூடப் போகிறேன்" என்பார்.

இந்த மாதிரி இவர் என்ன காரியம் பண்ணினாலும் சரி, தம் மனைவிக்காகத் தான் பண்ணுவார். இவர் சூட், டை முதலியன போட்டுக் கொள்வதும் மனைவிக்காகத்தான். அடிக்கடி சினிமாவுக்குப் போவதும் மனைவிக்காகத்தான். சங்கீத சபையில் அங்கத்தினராகச் சேர்ந்திருப்பதும் மனைவிக்காகத்தான். ஊரில் உள்ள வாசக சாலைகளுக் கெல்லாம் பணம் கட்டி யிருப்பதும் மனைவிக் காகத்தான்.

பழைய காலத்தில் இந்த மாதிரி நடந்து கொள்ளுகிறவர்களைப் "பெண்டாட்டி தாஸர்கள்" என்று ஜனங்கள் பழிப்பார்கள். தாங்கள் மனைவிக்குத் தாஸானு தாஸர்களாக இருப்பது வெளியில் தெரியக் கூடாது என்று இந்த தாஸானு தாஸர்கள் என்னென்னமோ யுக்திகள் எல்லாம் கையாளுவார்கள். "நான் அடிக்கிறாப் போல் அடிக்கிறேன், நீ அழுறாப்போல் அழு" என்று மனைவியிடம் சொல்லி வைத்து அவள் சொன்ன காரியத்தையே தாங்கள் சொல்வது போல் வெளியில் நாலு பேர் காதுக்குக் கேட்கும்படி சொல்வார்கள். (இந்தாரும், அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யர்! வீணாக என்னோடு சண்டைக்கு வராதேயும். நான் உம்மைப்பற்றி ஒன்றும்



"என்னப்பா! தொட்டியில் தண்ணீர் ரொப்பும்படி பெரியம்மா சொன்னாங்க, அம்மா சொன்னாங்க, நான் வேறு சொன்னேன், இன்னும் தண்ணீர் ரொப்பாமலேயே இருக்கிறாயே?"

"இந்தாங்க, இந்த மாதிரி ஆளுக்கு ஆள் நாட்டாமை பண்ணினால் வேலை செய்ய முடியாது என்று உங்ககிட்ட வேலையை ஒப்புக் கொள்ளும்போதே சொன்னேனுங்களே?"

சொல்லவில்லை. பொதுவாக உலகில் நடக்கும் விஷயங்களைத்தான் சொல்கிறேன்.)

ஆகவே பழைய காலத்திலும் நண்பர் கணபதியைப் போன்ற தாஸானுதாஸர்கள் இருக்கத்தான் செய்தார்கள். ஆனால் அவர்களுக்கும் நண்பர் கணபதிக்கும் உள்ள வித்தியாசம் இதுதான். அவர்கள் தாங்கள் தங்கள் மனைவியின் தாஸர்கள் என்பதை ஒப்புக்கொள்ள மாட்டார்கள். இவரோ தாம் ஒப்பிக் கொள்வதோடு மட்டும் இல்லை, அதை ஒரு பெருமையாகவே சொல்லிக் கொள்வார்.

சம்பளத்தை யெல்லாம் அப்படியே மனைவியிடம் கொடுத்து விட்டு, தமக்கு ஒரு தம்படி வேண்டுமானாலும் மனைவியைத்தான் கேட்டு வாங்கிக் கொள்வார். இது விஷயத்தை கணபதி ஒப்புக் கொள்ளும் போது அவர் முகத்தைப் பார்க்க வேண்டுமே! என்ன பூரிப்பு! என்ன ஆனந்தம்! என்ன முக மலர்ச்சி!

"நமக்கேன் ஸார், இந்தப் பணத் தண்டா வெல்லாம்! எல்லாம் என் மனைவிதான் ஸார் கவனித்துக் கொள்வாள். சம்பளத்தை வாங்க வேண்டியது. பேசாமல் அவள் கையில் கொண்டு வந்து கொடுத்து விட வேண்டியது. எதற்குப் பணம் வேண்டுமானாலும் அவளைக் கேட்டு வாங்கிக் கொள்ள வேண்டியது. சில பேர் இருக்கிறார்களே, எல்லாப் பணத்தையும் தாங்களே வைத்துக் கொண்டு, தாங்களே கூட்டல் கழித்தல், பெருக்கல், வகுத்தல் எல்லாம் செய்து கொண்டு திண்டாடிக் கொண்டு. அப்படி எல்லாம் நான் திண்டாடுகிற வழக்கமே கிடையாது ஸார்" என்று அவர் சொல்லும்போது, சந்தோஷத்தால் அவர் முப்பத்திரண்டு பற்களும் வெளியில் தெரியும்.

இன்னும் நாம் அவருடன் என்ன விஷயத்தைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருக்கட்டும், யுத்தத்தின் கஷ்ட நஷ்டங்களைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருக்கட்டும், தபீர் போண்டாவின் அருமை, பெருமைகளைப் பற்றித் தான் பேசிக் கொண்டிருக்கட்டும், அதில் அவர் மனைவியும், அந்த அம்மாளின் குணாதிசயங்களும் வராமல் இருக்காது.

என்ன விஷயத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தாலும், "நேற்று என் மனைவி ஒரு புஸ்தகம் வாசித்துக் கொண்டிருந்தாள். அதில் இந்த விஷயத்தைப் பற்றி ஒரு போலிஷ் ஆசிரியர் எழுதியிருக்கிறாராம்" என்று அந்தப் போலிஷ் ஆசிரியர் எழுதியிருப்பதைச் சொல்ல ஆரம்பிப்பார்.

எந்த ஒரு விஷயத்தைப் பற்றியும் மேல் நாட்டு ஆசிரியர் யாராவது என்ன சொல்லியிருக்கிறார் என்று தெரிய வேண்டுமானால் இவரிடம் அந்த விஷயத்தைப் பிரஸ்தாபித்தால் போதும். உடனே தம் மனைவி அதைப்பற்றி என்ன சொன்னாள், அல்லது என்ன படித்திருக்கிறாள் என்னும் விஷயம் உடனே வெளிவந்து விடும்.

இப்படியாகத்தானே தனக் கென வாழாமல் தம் மனைவிக்காகவே வாழும் இந்தப் பிரகிருதியை கணவனாகப் படைத்த அந்த அம்மாளின் பாக்கியமே பாக்கியம்!

---

## கிட்டுவின் கேள்வி — 7



கிட்டு:— அப்பா! என்னுடைய நோட்டுப் புஸ்தகத்தில் வாத்தியார் ஏதோ கிறுக்கிக் கொடுத்திருக்காரே, என்னப்பா அது புரியவில்லையே?

தகப்பனார்:— இது தெரியவில்லையா கிட்டு? நீ எழுதும் கையெழுத்து முத்து முத்தாகப் புரியும்படி எழுதவேண்டுமென்றுதான் எழுதியிருக்கார்!

# இப்பொழுது நீங்கள் ஒரு உயர்ந்த ரக தேயிலையை குறைந்த விலையில் பெறலாம்

# ப்ளாண்டர்ஸ்




இதற்கு முன் எந்த டீ கம்பெனியும் இவ்வளவு குறைந்த விலைக்கு இவ்வளவு அதிகம் கொடுத்ததில்லை. தற்சமயம் இந்த ஊரில் ப்ளாண்டர்ஸ் "ரெட் டைமண்ட்" "லோடஸ்" மார்க் தேயிலைகள் நிச்சயமாய் குறைந்த விலைக்கு கிடைக்கின்றன. அவைகளின் ரகமோ நிச்சயமாக மேன்மையானது. உங்கள் வியாபாரிவிடம் கிடைக்காவிடில் எங்களுக்கு எழுதுங்கள்.

**தி ப்ளாண்டர்ஸ் கம்பெனி லிமிடெட்,**

**"ஸ்பிரிங்டேல்" கூனூர், நீலகிரி, தென் இந்தியா.**

PTK-3




# நல்ல உயர்ந்த பண்டங்களையே விரும்புவோருக்கு

நமக்குக் கட்டாவிடினும் நம்மில் எல்லோரும் மேன்மையான பண்டங்களையே விரும்புகிறோம். சிகரெட்டில் சிறந்த புகையிலையை உபயோகித்தால்தான் அது விரும்பிப் பலராலும் சிறந்ததென்று சொல்லப்படும். டிலக்ஸ் டெனுர் சிகரெட் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது. பலரும் வாங்கி ஆனந்தமாக அனுபவிக்கலாம். உத்தரவாதமுள்ள 100% வர்ஜீனியா புகையிலைகளாலேதான் டிலக்ஸ் டெனுர் சிகரெட்டுகள் செய்யப்படுகின்றன.

டி லக்ஸ் டெனுர் சிகரெட்டு
ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்

**Tenor** is truly a de Luxe Cigarette

JAMES CARLTON LTD, LONDON.

# தி இந்தியன் பாங்க்
## லிமிடெட்.

★

தலைமை ஆபீஸ் :

"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"
வடக்கு பீச் ரோடு, மதராஸ்

★

லோகல் ஆபீஸ்கள் :

எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி,
மவுண்டு ரோடு, மயிலாப்பூர்,
தியாகராய நகர், புரசவாக்கம்.

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும், பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

★

வழங்கி வாக்களிக்கப்பட்ட
மூலதனம் ரூ. 60,00,000
செலுத்தப்பட்ட
மூலதனம் ரூ. 33,48,561
ரிஸர்வ் நிதி ரூ. 32,00,000
டெபாஸிட்டுகள் ரூ. 10 கோடிக்கு அதிகம்

★

சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர்
செக்ரடரி.



# T. K. S.
## சகோதரர்களின்
## "நாடகம்"

★

22 - 2 - 45
முதல் தினசரி



## குமாஸ்தாவின் பெண்

# திருச்சி
## முனிசிபல் ஹாலில்

★

ஞாயிறு புதன் மாலை 7-க்கும்
மற்ற நாட்களில் இரவு 10-30க்கும்




**சகல விதமான வலிகளையும் 10 நிமிஷங்களில் நிறுத்த**

# புத்திசாலிகள் தெரிந்தெடுப்பது

கட்டாவ் வாயில்களைத்தான் விவேகமும் பகுத்தறிவுமுடைய பெண் மணிகள் மனமுவந்து தெரிந்தெடுப்பது. 65 ஆண்டுகளுக்கு மேலான பிரசித்தி வாய்ந்த மில்லில் நெசவு செய்யப் படும் இந்த வாயில்களின் அலாதி மினுப்பும், பளபளப்பும், இழைகளின் சேர்த்தியும் மிகவும் சிறந்த நிலை யடைந்து விளங்குகின்றன. பற்பல மனமோகன நிறுசுகள் கண்ணைக் கவரும் கலர்களில் வாங்கக் கிடைக்கும்.

**கட்டாவ் வாயில்கள்**

அசலாயிந்து, சாயம் தோய்த்து மெர்ஸிரைஸ் செய்யப்பட்டது.

தி கட்டாவ் மகான்ஜி ஸ்பின்னிங்
& வீவிங் கம்பெனி லிமிடெட்

ஹெயின்ஸ் ரோடு பைகுல்லா பம்பாய்



Regd. No. M. 4392

# உங்களுடைய சாமான்களை வெளியூர்களுக்கு அனுப்ப



## இனி கவலை வேண்டியதில்லை

உங்கள் ஏற்றுமதி, இறக்குமதி எவ்வளவு இருந்தாலும் அவைகளை திருப்திகரமாயும், சிக்கனச் செலவிலும், உங்களுக்கு ஒருவித சிரமமில்லாமலும், குறித்த காலத்திலும், அநேகமாய் நேரே உங்கள் வீடோ அல்லது கிடங்குகளிலேயே கொண்டு போய்ச் சேர்க்கும்படியான வசதிகளை நாங்கள் செய்கிறோம்.

விவரங்களுக்கு எழுதவும்:

**ஸ்ரீ ராம விலாஸ் சர்வீஸ் லிமிடெட்**

மவுண்டு ரோடு (போன்: 8586) மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press.
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.